ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 12

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ, பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| முதல் தொகுதி | 10-8-1949<br>விரோதி௵ ஆடி௴ | 12-வது பகுதி |
|---|---|---|

## எம்பெருமானாரும்-ஆச்ரம ஸ்வீகாரமும்

ஸ்வாமி யெம்பெருமானார் க்ருஹஸ்தாச்ரமத்தைவிட்டு ஸந்ந்யாஸாச்ரமம் பூண்டதற்குச் சில காரணங்கள் சரித்திர நூல்களில் கூறப்பட்டுள்ளன- (1) ஸ்வாமி தாம் பெரியநம்பி திருவடிகளில் ஆச்ரயித்து அவரைப் பெருமாள் கோயிலென்கிற காஞ்சீபுரியிலே தம்முடைய திருமாளிகையிலேயே எழுந்தருளியிருக்கச்செய்து காலக்ஷேபம் செய்து வருகிறநாளிலே தம்முடைய தேவியார் நம்பிகளின் தேவியாரோடு மனம் மாறுபட்டிருந்ததாகவும், அஃதறிந்த நம்பிகள் ஸ்வாமியிடம் சொல்லிக்கொள்ளாமலே புறப்பட்டு எழுந்தருளிவிட்டதாகவும் இதனால் ஸ்வாமிக்குத் தேவியாரிடத்திலுண்டான சீற்றமே முதற்காரணம். (2) ஸ்வாமி தாம் திருக்கச்சி நம்பிகளிடத்தில் பரமப்ராவண்யங்கொண்டு அவர்பக்கலிலே ப்ரஸாதப்ரதிபத்திக்கு ஆசைப்பட்டு அவரைத் தம் திருமாளிகையில் அமுது செய்ய அழைத்திருந்தபோது தேவியார் செய்த அபசாரத்தினாலுண்டான சீற்றம் இரண்டாவது காரணம். (3) ஒருநாள் மிக்க பசியுடன் வந்திருந்தவொரு பாகவதர்க்கு ப்ரஸாதமிடும்படி ஸ்வாமி தேவியாருக்கு நியமித்தருள, உள்ளே ப்ரஸாதமிருந்தும் இல்லையென்று பொய்சொல்லிப் போகவிட்டதனாலுண்டான சீற்றம் மூன்றாவது காரணம்.

இப்படி சில காரணங்களைக்கொண்டே ஸ்வாமி தேவியாரைப் பிறந்தகத்திற்குப் போகவிட்டருளி உத்தமாசிரமம் ஸ்வீகரித்தருளினதாக ப்ரபாவ நூல்களில் வாசிக்கிறோம். இதைக்கண்டு இக்காலத்தவர்கள் சிலர் கூறுவது என்னவென்றால், ஸந்ந்யாஸாச்ரம ஸ்வீகாரத்திற்கு வைராக்யமன்றோ முக்கியமான காரணம்; குடும்பத்தில் மனஸ்தாபமேற்படுவது எங்குமுள்ளது. அதனால் ஸந்ந்யாஸாச்ரமத்தை ஸ்வீகரித்தாரென்பது யுக்தமாகுமோ? அந்தத் தேவியார் குணஹீனையாயிருந்தால் குணவதியான மற்றொரு தேவியைப் பாணிக்ரஹணம் செய்துகொண்டு இல்லற வாழ்க்கையை நடத்தவேண்டுமன்றோ. தேவியாருடைய குணங்கள் அனுகூலமாக இல்லையென்பதற்காக விஷய வைராக்யம் உண்டாய்

விடுமோ? மனைவி மக்களோடே சண்டையிட்டுத் தேசாந்தரம் போய்விடுவதுபோல, குடும்ப மநஸ்தாபத்தினால் ஸந்ந்யாஸியாய்விடுவது தகுதியோ? என்றிப்படிச் சிலர் கேள்வி கேட்க முற்படுகிறார்கள்.

இதற்கு த்ருப்திகரமான ஸமாதானத்தைத் தெரிவிக்கவல்லவர்கள் பெரியார்கள். நாம் நம்முடைய சிற்றறிவுக்கு எட்டியவளவு சிறிது தெரிவிக்கிறோமிங்கு. உத்தமாச்ரம ஸ்வீகாரத்திற்கு விஷய வைராக்யந்தான் முக்கியமான காரணமென்பது மறுக்கமுடியாததே. * **யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்** * என்கிற ப்ரமாண வசனத்தை ஆசாரியர்கள் எடுத்துக்காட்டியுள்ளார்கள். ஸ்வாமி யெம்பெருமானார் தாமும் வைராக்யமடியாகவே ஆச்ரம ஸ்வீகாரம் செய்தருளினார். வைராக்யமுண்டாவதற்குப் பல ஹேதுக்களுண்டு. அப்படிப்பட்ட ஹேதுக்களில் சிலவற்றைச் சரித்திர நூல்களில் காண்கிறோம். அந்த ஹேதுக்களினால் விரக்தி யுண்டாகி ஆச்ரம ஸ்வீகாரம் செய்துகொண்டாரென்றால் இதில் என்ன பிசகு?

ஸ்வாமியின்வைராக்யம் எப்படிப்பட்டதென்பதைப் பல ப்ரமாணங்கள்கொண்டு அறியலாம். **"காமாதிதோஷஹரம் ஆத்ம பதாச்ரிதாநம் ராமாநுஜம் யதிபதிம்"** என்கிறார் மணவாளமாமுனிகள். ஸ்வாமி தாம் விரக்தராயிருந்ததோடு தம்மடியார்களையும் பரமவிரக்தர்களாக்கியருளினவர் என்றபடி. தேசிகன் யதிராஜஸப்ததியில் "வஹதி மஹிளாம் ஆத்யோ வேதாஸ் த்ரயீமுகரைர் முகை: வரதநுதயா வாமோ பாகச் சிவஸ்ய விவர்த்ததே, ததபி பரமம் தத்வம் கோபீஜநஸ்ய வசம்வதம் மதநகதநைர் ந க்லிச்யந்தே யதீச்வர ஸம்ச்ரயா:" என்கிறார். இதன் கருத்தாவது—நான்முகன் தன் தேவியைப் பிரிந்திருக்கமாட்டாமல் தனது நான்கு முகங்களினாலும் அவளைச் சுமந்துகொண்டிருக்கிறான். சிவனோவென்னில் தன்னுடலில் பாதி பாகத்தைப் பத்னீமயமாக ஆக்கிவிட்டான். பரம்பொருளான ஸ்ரீமந் நாராயணனோவென்னில் கோபிகளுக்கு அடிமைப்பட்டுக் காமமயனாயினன். எம்பெருமானார் திருவடிகளைப்பற்றின மஹான்களோவென்னில் காமக்லேசங்களுக்குச் சிறிதும் ஆட்படமாட்டார்கள் என்பதாம். இங்ஙனே பல ப்ரமாணங்களினால் ஸ்வாமியின் வைராக்யாதிசயம் நன்கு அறியப்படுகின்றது. இதற்குமேல் சிலருடைய வாதம் என்னவென்றால், வைராக்யமுண்டானாலும் ஆச்ரமஸ்வீகாரம் செய்துகொள்ளவேணுமோ? **"நிவ்ருத்தராகஸ்ய க்ருஹம் தபோவநம்"** என்று ப்ரமாணமில்லையோ? கூரத்தாழ்வான் போல்வார் மஹாவிரக்தர்களாயிருக்கச் செய்தேயும் க்ருஹஸ்தாச்ரமத்திலேயே ஊன்றியிருக்கவில்லையோ? அப்படியே ஸ்வாமி தாமும் இருந்துவிடலாகாதோ? எதற்காகத் துரீயாச்ரம ஸ்வீகாரம் செய்யவேணும்? என்று கேட்கிறார்கள் சிலர். இதற்கு நாம் என்ன விடையிறுப்பது? சாஸ்த்ரங்களில் நான்கு ஆச்ரமங்கள் ஏற்பட்டிருக்கின்றன. சிலர் முதல் ஆச்ரமத்திலேயே [ப்ரஹ்மசர்யத்திலேயே] யாவஜ்ஜீவம் இருந்துவிடுகிறார்கள். பலர் அதற்கு மேற்பட்ட ஆச்ரமத்தில் பிரவேசித்து 'நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே" என்று ஆழ்வார் மங்களாசாஸனம் செய்தபடி வாழ்கின்றார்கள். காளிதாஸர் ரகுவம்சத்தில் **"வார்த்தகே முநிவ்ருத்தீநாம்"** என்று கூறியபடி வாநப்ரஸ்தாச்ரமத்திலே ஊன்றியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் தேடிப்பிடிக்கவேண்டியிருப்பர்கள். இல்லற வாழ்க்கையில் பொருத்தமற்றவர்கள் "சிற்றெயிற்று முற்றல் மூங்கில் மூன்றுதண்டரொன்றினர், அற்றபற்றர் சுற்றிவாழுமந்தணீரரங்கமே" (திருச்சந்தவிருத்தம்) என்று

திருமழிசைப்பிரான் மங்களாசாஸனம் செய்தருளினபடியே துறவறம் பூண்டு உத்தமாச்ரமிகளாக வாழ்கின்றனர். "வைராக்யமுண்டானாலும் க்ருஹஸ்தாச்ரமத்திலேயேயிருந்துவிடக்கூடாதா? எதுக்கு ஸந்ந்யாஸாச்ரமம் ஸ்வீகரிக்கவேணும்!" என்கிற கேள்விக்கு நாம் என்ன விடையிறுப்பது?

நஞ்சீயரென்கிற மஹாசார்யர் பூர்வாச்ரமத்தில் மஹாதனிகராயிருந்தவர். மேல்நாட்டில் வாழ்ந்தவர். அவர் பட்டரால் திருத்திப் பணிகொள்ளப்பட்டபின்பு சிலநாள் பொறுத்து ஸ்வஸ்தானத்தைவிட்டுத் தென்திருவரங்கத்திலே பட்டர் திருவடிநிழலிலே வாழ விரும்பிப் புறப்படும்போது உத்தமாச்ரம ஸ்வீகாரம் செய்துகொண்டு புறப்பட்டார். ஸ்ரீரங்கம் வந்துகொண்டிருக்கிறார். அப்போது வழியிடையில் சிறுப்புற்றூரில் எழுந்தருளியிருந்த அனந்தாழ்வான் அவரை நோக்கி "வேர்த்தபோது குளித்து விடாய்த்தபோது புஜித்து பட்டர் திருவடிகளே சரணமென்றிருந்தால் உம்மைத் திருநாட்டில்நின்றும் தள்ளிவிடுவாருண்டோ? எதுக்கு இந்தக் கோலம்பூண்டீர்?" என்று கேட்டதாக வாசிக்கிறோம். இது ஆக்ஷேபித்துக்கேட்ட கேள்வியன்று. ரஸகனமான கேள்வி. பட்டர் திருவடிகளில் கைங்கர்யம் செய்யப்பாரித்த இவர்க்கு இவ்வளவாக ஸம்ஸார வைராக்யமுண்டாயிற்றே யென்று திருவுள்ளம் பூரித்து விநோதமாகக் கேட்ட கேள்வியிது. பலர் ஸ்தாச்ர க்ருஹமத்திலேயே யிருப்பதும் சிலர் உத்தமாச்ரம ஸ்வீகாரம் செய்வதும் அவரவர்களுடைய ருசியைப் பொறுத்ததத்தனை. இன்னாரின்னார்க்கு ஸந்ந்யாஸாச்ரம ப்ராப்தியுளதென்பதை சோதிடர்கள் ஜாதகம் பார்த்தே சொல்லிவிடுவதையும் நாம் காண்கிறோம். ஆகவே பகவத் ஸங்கல்பிதமான பலவகை ப்ராப்திகளுள் இதுவுமொன்று என்று தெரியவருகிறது.

ஸ்வாமி யெம்பெருமானார் தேவியாரிடத்தில் வெறுப்பினால்மாத்திரம் ஆச்ரம ஸ்வீகாரம் செய்துகொண்டவரல்லர்; விரக்தியின் கனத்தினாலேயே உத்தமாச்ரமியானார் என்பதைக் கூறிநிற்போமிப்போது. உத்தமாச்ரமிகள் இருக்கவேண்டிய க்ரமங்கள் எப்படிப்பட்டவை? என்பதைப்பற்றி மற்றொருகால் விமர்சிப்போம்.

# சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

அன்பர்களே,! நமது ஸ்ரீ ராமாநுஜனுக்கு முதலாண்டு நிரம்பிவிட்டது. அடுத்த இதழ் இரண்டாமாண்டில் அடிவைப்பதாகும். இந்த பன்னிரண்டாவது ஸஞ்சிகையோடு முதல் வருஷம் பூர்த்தியாகி விட்டது. இதுவரையில் சந்தா செலுத்தியும், விசேஷவுதவிகளை யளித்தும் நமக்கு ஊக்கத்தை மிகுவித்த மஹநீயர்களுக்கு நாம் மிகவும் கடமைப் பட்டிருக்கிறோம். இதுவரையில் சந்தா செலுத்தாதவர்கள் உடனே அடுத்த வருஷத்தின் சந்தாவையும் சேர்த்து அனுப்பும்படி விநயமுடன் பிரார்த்திக்கிறோம். நமது பத்திரிகையை வி. பி. மூலமாக அனுப்ப விருப்பமில்லாமையால் அவரவர்கள் புது வருஷச் சந்தாவை **10-9-49** தேதிக்குள்ளாக மணியார்டர் மூலம் அனுப்பிவிடுமாறு பிரார்த்திக்கப்படுகிறார்கள். உடனே பணமனுப்ப ஸௌகரியமில்லாதவர்கள் தபால் மூலம் தெரிவித்துக்கொள்வது தகுதி. இரண்டு மில்லாமல் வாளாவிருப்பவர்களுக்கு அடுத்த பத்திரிகை அனுப்பப் படமாட்டாது.

அன்றியும் மற்ருெரு முக்கியமான பிரார்த்தனையையும் கவனிக்க வேண்டுகிருேம். சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் மூலமாகவே இப்பத்திரிகை வெளியிடப்பட்டு வருகின்றதென்பதை யாவருமறிந்திருக்கின்றீர்கள். அந்த ஸபையில் பேட்ரன்களாகவோ லைப்மெம்பர்களாகவோ ஆர்டினரி சந்தாதாரர்களாகவோ அந்வயித்தவர்களுக்கு இப்பத்திரிகை எந்நாளும் இனமாக அனுப்பப்பட்டு வருமென்றும், அவர்கள் இப்பத்திரிகைக்காகத் தனிப்பட சந்தா செலுத்தவேண்டாவென்றும் இதனையும் நன்கு அறிந்திருக்கிறீர்கள். அந்த ஸபையின் மூலமாக, நம் ஸம்பிரதாயத்திற்கு அவசியமான மிகவுயர்ந்த க்ரந்தங்கள் வெளியிடப்பட்டு வருவதால் அந்த ஸபையை மிகவும் அபிவிருத்திக்குக் கொண்டு வர வேண்டியது அவசியமானதென்று கருதி யாவரும் அந்த ஸபையிலேயே மெம்பர்களாக அந்வயிக்கவேண்டுமென்பது எமது கோரிக்கை. அதமபக்ஷமாக, வருஷந்தோறும் 12-0-0 ரூ செலுத்துகிற ஆர்டினரி மெம்பர்களாகவாவது சேரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிருேம். அதற்கு இசையுமவர்கள் புத்தகங்களின் தபால் செலவுக்காகத் தனிப்பட்ட 3 ரூ சேர்த்து 15 ரூபாயாக அனுப்பவேண்டு மென்பதை ஞாபகப்படுத்துகிருேம்.

ஷை ஸபையின் ரிபோர்ட்டும் இத்துடன் வெளிவருகின்றது.

இப்படிக்கு
காரியதர்சி-ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபா, மதராஸ்.

அவரவர்கள் மணியார்டர் அனுப்ப விலாஸம் "காஞ்சீபுரம் P. B. அண்ணங்கராசாரியர்" என்றே.

---

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.
ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# கைங்கர்ய குதூஹலம்

## (ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியர்)

நம்முடைய பூர்வாசார்யர்கள் திவ்யப்ரபந்த வியாக்கியானங்களிலே ஒரு ஸ்ரீஸூக்தியை அடிக்கடி அருளிச்செய்துள்ளார்கள்; அதாவது "**அவதாரம்போலே தீர்த்தம்ப்ரஸாதியாதே**" என்பது. ஸ்ரீராமக்ருஷ்ணுதி விபவாவதாரங்களிற்காட்டிலும் கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான திவ்ய தேச நிலைக் குண்டான வாசியைக் கூறுகின்ற ஸ்ரீஸூக்தி இது. ராமக்ருஷ்ணுதி விபவமூர்த்திகளானவை அவதார கார்ய ஸமாப்தியானவுடனே "ஆண்டு தன் சோதிபுக்க அமரரரியேற்றினையே" "விண்முழுது மெதிர்வரத் தன்தாமமேவிச் சென்றினிது வீற்றிருந்த வம்மான்தன்னை" என்கிற அருளிச்செயல்களின்படியே அவதார ஸமாப்தியைச் செய்துகொண்டு தன்னடிச் சோதிக்கு எழுந்தருளிவிடுவதுபோல் அர்ச்சாவதாரமூர்த்திகள் ஒருகாலும் இவ்விடத்தை விட்டுப் பெயர்ந்துபோவதில்லையென்றும், இவ்விடத்திலேயே நித்யஸந்நிதி பண்ணியிருப்

பவையென்றும் இவ்விஷயத்தைத் தெரிவிப்பதாகும்- **"அவதாரம்போலே தீர்த்தம்ப்ரஸாதியாதே"** என்கிற மேற்குறித்த திவ்யஸூக்தி. * மன்னுகுருகூர் * மன்னுகுறுங்குடி * *மன்னியதென்னரங்கம்* எனவருமிடங்களில் இப்படியருளிச்செய்கிறார்கள்.

பூர்வாசார்யர்கள் இப்படி யருளிச்செய்யவில்லையென்றாவது, அவர்களருளிச் செய்ததற்கு இது பொருளன்று என்றாவது யாரும் சொல்லமுடியாது. ஆனால் இப்படி யருளிச்செய்த ஆசார்யர்கள் இக்காலத்தில் எழுந்தருளியிருந்தார்களாகில், விபவாவதார மூர்த்திகள்போலவே அர்ச்சாவதார மூர்த்திகளும் தீர்த்தம் ப்ரஸாதித்துவிட்டுத் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளியாயிற்று என்றே நிச்சயித்து ஆலயவழிபாடுகளிலிருந்து விலகியே யிருப்பார்களென்பதில் அடியேனுடையவுள்ளம் சிறிதும் ஸந்தேஹங்கொள்ளவில்லை. ஏனென்னில், ஆசார்யர்கள் சாஸ்த்ரவச்யர்களில் தலைவர்களாதலால் சாஸ்த்ரவிருத்தமான நடவடிக்கைகளை ஒருகாலும் உகந்திருக்கமாட்டார்களன்றோ. இக்காலத்திய விபரீத ஸம்பவங்கள் அக்காலத்தில் ஆசார்யர்களுடைய திருவுள்ளத்தில் தோன்றாமையினாலேயே மேற்குறித்த ஸ்ரீஸூக்தியை அருளிச்செய்து வைத்தார்கள்.

அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதானனான எம்பெருமானுக்கு எந்த நடத்தையினாலும் யாதொரு அவத்யமும் நேராதென்று சிலர் செய்கிற வாதங்கள் ப்ராமாணிக கோஷ்டியில் ஒருகாலும் பரிசுபெறமாட்டாதவை. இந்த அத்யவஸாயத்திலிருந்து அடியேனுடையவுள்ளம் ஒருநாளும் நெகிழமாட்டாது, தளரமாட்டாது. ஆனால் இவ்விருள் தருமாஞாலத்தில் தோன்றிய நமக்கு திவ்யதேசாநுபவமென்பது மிகச் சிறந்த செல்வமாக அநாதியநுபவமாய் அமைந்துவிட்டது. விசேஷச்ரமப்பட்டு திவ்யப்ரபந்தங்களை யதிகரித்ததும் வேதமோதினதும் திவ்யதேசங்களில் கைங்கரியத்திற்காகவேயல்லது கைவல்யாநுபவத்திற்காகவன்று. அப்படிப்பட்ட கைங்கர்யம் கிடைப்பது ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவப் பயனேயாகும். அப்படி கிடைத்த கைங்கரியத்தை ஒரு பிறவியில் அடியோடு இழந்துவிடுவதென்பது நினைக்க நினைக்க ஆத்மாவுக்கு அஸஹ்யவ்யஸனமாகவுள்ளது. திருவாய்மொழியில் (9—2) * பண்டைநாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங் கொண்டு * என்கிற பதிகத்திற்குச் சமானமான பதிகம் ஒன்றிருப்பதாக அடியேனுள்ளத்தில் தோன்றவில்லை. அப்பதிகத்தில் **"தங்களன்பாரத் தமது சொல்வலத்தால் தலைத் தலைச் சிறந்து பூசிப்ப"** என்றுள்ள அடியை அநுஸந்திக்கும்போதெல்லாம் நெஞ்சு நீர்ப் பண்டமாயுருகும். தங்களன்பாரத் தமது சொல்வலத்தால் பூசிப்பதென்பது பெறுதற்கரிதான பெரும் பாக்கியமன்றோ. இத்தகைய பாக்கியத்தை அநிதரஸாதாரணமாகப் பெற்று வைத்து "எழில்கொள்நின் திருக்கண்ணிணை நோக்கந்தன்னையும் இழந்தேனிழந்தேனே" என்று புலம்பிக்கொண்டே வாழ்நாளைக் கழிப்பதென்றால் இதற்குத் தனிப்பட்ட நெஞ்சுரம் வேண்டும். அடியேன்போல்வார்க்கு இந்த நெஞ்சுரம் பயிலமுடியாததாயிருக்கின்றது.

திருமங்கையாழ்வார் திருக்கண்ணமங்கைக்கெழுந்தருளி * **பெரும்புறக்கடலை யடலேற்றினை** யென்று தொடங்கி ஆச்சரியமாகப்பாடினார். அந்தப் பாசுரங்களைக் கேட்டருளின பத்தராவிப்பெருமாள் அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து ஆழ்வாரை நோக்கி "ஆழ்வீர்! உம்முடைய பாசுரங்கள் வெகு அற்புதமாயிருக்கின்றனவே; இந்தப்பாசுரங்களைக் கற்க எனக்கும் ஆசையாயிருக்கின்றதுகாணும்; நானும் கற்கலாமோ?" என்று

கேட்க; அந்தப்பதிகத்தின் கடைப்பாசுரத்தில் ஆழ்வார் அதற்கு விடை கூறியுள்ளார்—"மெய்ம்மை சொல்லில் வெண்சங்கமொன்றேந்திய கண்ணா!, நின்தனக்குக் குறிப்பாகில் கற்கலாம்" என்று. இப்படி எம்பெருமானும் கற்க ஆசைப்பட்டுக் கிடையாததான கல்வியை "நோற்றேன் பல் பிறவி—எற்றேனிப்பிறப்பே" என்னும்படியாகப் பெற்று வைத்து, ஊமனர்கண்ட கனவிலும் பழுதாக நம் நாள்களை யொழிப்பதாவென வருந்தி, அவ்வருத்தம் நீங்குதற்கு 'இனி வாசிக கைங்கரியத்தில்மாத்திரம் அந்வயிப்போமா?' என்று கொண்ட கைங்கர்ய குதூஹலத்தை இதனால் விஜ்ஞாபித்துக்கொண்டேன்.

இதில் சாஸ்த்ர விரோதமே கிடையாதென்றும், தீர்த்தப்ரஸாதங்களும் தாராள மாக ஸ்வீகரிக்கலாமென்றும் பிரசாரம் செய்வாருடைய திரளிலே அடியேன் புகுந்தவனல்லேன். அந்த நினைவு இப்பிறப்பில் ஒருநாளும் தோன்றாதடியேனுக்கு. சாஸ்த்ர நெறிக்கு மாறுபாடாகச் செய்கிறோமென்கிற திண்ணமான நினைவோடுதான் இதில் இழிகிறேன். ஸ்ரீபெரும்பூதூர், திருவல்லிக்கேணி முதலான இடங்களில் வ்யபதிஷ்டர்களாக எழுந்தருளியுள்ள பெரியார்களைப் பின்பற்றியிருந்தவடியேனுக்கு இந்த மஹாபரீதம் நெஞ்சினால் நினைக்கும்போதே உண்மையில் நடுக்கம் தருகின்றது. என்செய்வேன் பாவியேன்.

பாபங்களை மூன்று வகுப்பாகப் பிரித்துள்ளது சாஸ்த்ரம்; (1) புத்திபூர்வகம், (2) ப்ராமாதிகம், (3) அகதிகம் என்று. அடியேனுடைய இவ்வபராதம் புத்திபூர்வகமுமன்று, ப்ராமாதிகமுமன்று; **அகதிகம்**. ஏகாதசியன்று போஜனம் செய்வது மஹா பாதகமென்று நெஞ்சாரத் தெரிந்திருக்கச்செய்தேயும் **தரிக்ககில்லாமல்** உண்பாரைப்போலே அடியேனைக் கொள்வது.

இந்த ஆபத்து தோன்றுவதற்குமுன்பே ஸபைகூட்டி விசாரம் நேர்ந்தகாலத்தில் "ஸர்வாத்மநா சாஸ்த்ரவிருத்தமேயாகிலும் வாசாகைங்கரியத்தைமாத்திரம் இழந்திருக்கவொண்ணாது" என்றே அடியேன் பெரியார் திருமுன்பே விஜ்ஞாபித்திருந்தவன். அப்படியிருந்தும் பகவத் ஸங்கல்பத்தாலே இழக்க நேர்ந்திருந்ததிதுவரை. "முகப்பேகூவிப் பணிகொள்ளாய்" என்று செய்துகொண்டிருந்த ப்ரார்த்தனை இப்போது பலித்ததாகவேணும். அதுவு மவனதின்னருளே.

இவ்வாபத்திற்கு என்றேனுமொருநாள் எம்பெருமானருளால் பரிஹாரமேற்படுமென்கிற அத்யவஸாயங்கொண்டே அடியேன் இதுவரை விலகியிருந்தது. அந்த அத்யவஸாயத்தில் இப்போதும் குறையில்லை. ஆனால் "அரசன் அன்று, தெய்வம் நின்று" என்கிறபடியே மிகவும் தாமதிக்கும்போதும். நம்முடைய ஜீவிதகாலம் இவ்வளவென்று நமக்குத் தெரியாது. * இம்மைப்பிறவி செய்யாதே இனிப்போய்ச்செய்யும் தவந்தானென் * என்பது முதலான பாசுரங்களை யநுஸந்திக்கும்போது நெஞ்சு பதறுகின்றது.

இவ்வுடல்விட்டு நீங்கினால் "மன்னுயிர்காளிங்கே" என்கிற பாசுரப்படி நமக்குத் திருநாடு திண்ணமே; அங்கு நாம் * **ஏதத் ஸாம காயந்நாஸ்தே** * என்ற உபநிஷத்தின்படி ஸாமகானம் பண்ணப்ராப்தமாகும். ஆழ்வாரருளிச்செயல்களை ஆசைதீர வோதவேணுமானால் இங்கிலத்தில்தானே ஓதவேண்டும்.

பெரிய திருமொழியில் (8—2) * தெள்ளியீர் * என்கிற திருக்கண்ணபுரப்பதிகத்திற்கு ஆழ்வார் பயனுரைக்கும்போது "சீர்மலிபாடலிவை பத்தும் வல்லவர், நீர்மலி வையத்து நீடுநிற்பார்களே" என்றருளிச்செய்தார்; இங்கு பரமபதப்ராப்தியைப் பலனாகச் சொல்லாமல் இந்தப் பாழும் ஸம்ஸாரத்திலிருப்பைப் பலனாகச் சொல்லுவானேன்? என்று சங்கித்துக்கொண்டு பெரியவாச்சான் பிள்ளை என்ன அருளிச்செய்கிறாரென்னில், **"பரமபதத்திலே தெள்ளியீரில்லையே; தெள்ளியீருள்ளது இங்கே யன்றோ"** என்கிறார். ஆழ்வார் பாசுரங்களை இந்த ஸம்ஸார நிலத்திலேயே அநுபவிக்கவேண்டியிருக்கையாலே அதிலுள்ள ஆஸ்தையினால் ஸம்ஸார வாழ்க்கையைப் பலனாக அருளிச்செய்தது பொருந்துமென்பது தாற்பரியம். ஸ்வல்பாவசேஷமான வாழ்நாளிலே, ப்ராப்தமான இவ்வநுபவத்தை இழப்பானேன்? என்கிற இவ்வெண்ணமொன்றுதவிர வேறெண்ணமில்லையடியேனுக்கு. மனஸ்பூர்த்தியாகப் பாபம் செய்வதாகத் துணிந்தே இந்த ஸாஹஸத்தில் இழிகின்றேன். க்ஷணந்தோறும் நாம் செய்கிற பல பல பாவங்களை **"யதஹ்நா பாபமகார்ஷம் யத்ராத்ரியா பாபமகார்ஷம்"** என்று ஒரு சுளகம் தீர்த்தம்பருகிப் போக்கிக்கொள்ளுகிறோமன்றோ; அப்படியே இப்பாவத்தையும் போக்கிக்கொள்வோமே யென்று தோன்றிற்று.

இவ்விஷயத்தில் அடியேனுடைய முடிவைப் பல ஆப்தர்கள் ஆங்காங்கு எதிர்பார்த்திருப்பதனால் அவர்களுக்காக இது வெளியிட்டபடி. இந்தப் பாபத்தில் மற்றையோரும் அடியேனைப் பின்பற்றவேணுமென்று கனவிலும் நினைக்ககில்லேன்.

*தழைநல்லவின்பந்தலைப்பெய்து எங்குந்தழைக்கவே* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின் கருத்தை மூன்று ஆசாரியர்கள் மூவகையாக வகுத்தருளினார்கள்; நான்பட்ட க்லேசம் நாடு படவேண்டாமென்று ஆழ்வார் ஆசாஸிப்பதாக எம்பெருமானார் நிர்வஹித்தருளினர். (ஈடு காண்க) அதுபோல, அடியேன் செய்கிற பாபம் மற்றையோர்க்கும் வேண்டாமென்பதே உண்மையாக அடியேனுடைய ஆசம்ஸை.

அடியேனுடைய திருத்தகப்பனார் மிக்க இளவயதிலேயே அடியேனுக்கு அருளிச்செயலைக்கற்பித்து "அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து" என்றாப்போலே அறியாத இளம்பிராயத்திலேயே கைங்கர்ய ருசியை யுண்டாக்கி திருநாட்டுக்கெழுந்தருளுகிற ஸமயத்திலும் "அருளிச்செயல்கோஷ்டியை அரைக்ஷணமும் விடாதே" என்று நியமித்தருளினார். பூர்வாச்ரம மாதாமஹராயெழுந்தருளியிருந்த ஜகத் ப்ரஸித்தரான ஸ்ரீமத் பரமஹம்ஸ ஜீயர் ஸ்வாமியும் இங்ஙனே பலகால் நியமிக்கலாயிருந்தது. இந்த நியமனங்களை ஏறக்குறைய நாற்பது வருஷகாலம் ஆனந்தமாகப் பரிபாலித்தவனடியேன். நிரங்குசஸ்வதந்திரனுடைய ஸங்கல்பமடியாக இழந்திருந்தகாலம் போகட்டும். இனியாகிலும் அவனுடைய நிக்ரஹ ஸங்கல்பம் தீர்ந்து வாசிககைங்கர்யமாத்திரத்திலே ஆட்படநேரவேணுமென்கிற பாரிப்பைப் பாரோரறிய விண்ணப்பம் செய்துகொண்டேன்.

உண்மையில் சாஸ்த்ரீய ஸரணியில் இது மிகவும் அநுசிதமான க்ருத்யமாதலால், அடியேனிடம் பரிவுபூண்ட பெரியார்கள் நேரிலும் ஸ்ரீமுக மூலமாகவும் சிக்ஷிக்க விரும்பக்கூடும். ரந்த்ராந்வேஷிகளான சிலர் பரீவாதங்கள் செய்யவுங்கூடும். எம்பெருமான் திருவுள்ளப்படியாகுகவென்றிருக்கிறேன்.

அர்ச்சாவதார ஸௌந்தர்யாநுபவத்தை இழந்திருக்கமுடியாமலோ, ப்ரஸாத பணியாரங்களை இழந்திருக்கமுடியாமலோ, மரியாதைகளையும் மற்றும் வருமானங்களையும் இழந்திருக்கமுடியாமலோ அடியேன் ப்ரவேசிக்கவிரும்புவதாக ஒருவரும் நினையார். அவற்றில் ருசியற்றவனடியேன். கம்பர் சடகோபரந்தாதியில் "கூட்டங்கள்தோறும் குருகைப்பிரான் குணங்கூறுமன்பரீட்டங்கள்தோறுமிருக்க" என்றாற்போன்ற ஆசையொன்றே அடியேற்குளது.

அருளிச்செயல்களை யநுபவிக்க அநவத்யமான பலவழிகளில்லையோவென்று சொல்லுவாரும் கருதுவாருமுளர். * என்னெஞ்சினால் நோக்கிக்காணீர் என்னை முனியாதே * என்று சொல்லி நிற்கின்றேன்.

15-7-49 Camp. Badrinath **P. B. ANNANGARACHARYAR**

---

# நான்கண்ட நல்லவை

(ப்ர. அ.)

(முன் தொடர்ச்சி)

10. திருவாய்மொழியில் (10—2—1) * கெடுமிடராயவெல்லாம் * என்ற பாசுரத்தின் ஈட்டில் பட்டருடைய ஐதிஹ்யமொன்று காண்கிறது; ஒருநாள் அழகிய மணவாளன் வேட்டைத் திருநாளுக்காக ஓர் ஆற்றங்கரையிலே யெழுந்தருளியிருந்தார்; அங்கே பல ஸ்ரீவைஷ்ணவர்களும் தாமுமாய் பட்டர் எழுந்தருளியிருந்து பெருமாள் வடிவழகிலே யீடுபட்டு அழகிய ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்துகொண்டிருக்கையில், சிலர் வந்து 'ஸந்த்யாகாலமாயிற்று' என்று விண்ணப்பஞ் செய்தார்கள். 'ஸந்த்யாவந்தனம் அநுஷ்டிக்கவேணுமாகையாலே அதற்கு இடையூறாயிருக்கும் உபந்யாஸத்தை நிறுத்தியருளவேணும்' என்பது அவர்களுடைய கருத்துப்போலும். அப்போது பட்டர் 'நாம் பெருமாளழகிலே துவக்குண்டு இன்றொருநாள் அனுஷ்டானத்திலே சிறிது விளம்பித்தோமென்றால் யமனுடைய ஓலையிலே இதுவொரு குற்றமாக ஏறமாட்டாதுகாணும்; 'உனக்காகித் தொண்டுபட்ட நல்லேனை வினைகள் நலியாமை நம்புநம்பீ' என்று திருமங்கையாழ்வாரருளிச்செய்த பாசுரம் அறியீர்களோ? அவனுக்காகத் தொண்டுபட்டுப் போது போக்குமவர்களை வினைகள் நலியுமோ?' இத்யாதிகள் அருளிச்செய்தாராம்.

11. * எருளுமிறையோனும் திசைமுகனுந் திருமகளுங் கூறாளுந் தனியுடம்பன் * என்றும், * அக்கும் புலியினதளுமுடையாரவரொருவர் பக்கம் நிற்க நின்ற பண்பர் * என்றும் இப்படி அடிக்கடி ஆழ்வார்கள் அருளிச்செய்கிறார்கள். எம்பெருமானுடைய ஸௌசீல்ய குணத்தைப்பற்றிப் பேசும் பிரகரணங்களில் இப்படி யருளிச்செய்கிறார்கள். தனது திருமேனியில் பிராட்டிக்கு இடங்கொடுத்திருப்பது போலவே பிரமனுக்கும் சிவனுக்கும் இடம் கொடுத்திருப்பதாகச் சொல்லப்படுகிறது, சிவன் முதலானோர் எப்போதும் எம்பெருமானுடைய திருமேனியைப்பற்றி யிருக்கிறார்களோ வென்கிற சங்கை பிறக்கக் கூடும். இதைப்பற்றி அப்பாசுரங்களின் வியாக்கியானங்களில் பூருவர்கள் அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"ஸர்வகாலமும் இவர்கள் எம்பெருமானுடைய திருமேனியிலே யிருப்பர்களோவென்னில்; ஆபத்துக்களிலே திருமேனியிலே இடங்கொடுத்தருளும்; அது மஹா குணமாகையாலே ஆழ்வார்கள் எப்போதுமொக்க அருளிச்செய்துகொண்டு போருவர்கள், ஸாமந்தர்க்குப் புறம்பே நாடுகள் கனக்க

வுண்டாகிலும் மாளிகைக்குள்ளே செம்பாலே நாழிகையரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பர் களிறே. அப்படியே இவர்களும் திருமேனியில் பண்ணிவைக்கும் ப்ராப்தி விடார்களிறே. ஓரோ கலஹங்களிலே அடையவளைந்தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து கலஹந் தெளிந்தவாறே புறம்பு புறப்பட்டாலும் 'இவ்விடம் இன்னார் பற்று, இவ்விடம் இன்னார் பற்று' என்று பின்னும் ப்ராப்தி சொல்லிவைக்குமா போலே",

12. * மூவா வானவர்தம் முதல்வா! மதிகோள் விடுத்த தேவா * என்றும் * தேம்பலிளந்திங்கள் சிறைவிடுத்து ஐவாய்ப் பாம்பினணைப் பள்ளிகொண்டாய் * என்றும், எம்பெருமான் சந்திரனுடைய துயரைத் தீர்த்ததாக ஆழ்வார்கள் அநுஸந்திக்கக் காண்கிறோம். இவ்வரலாற்றின் விவரணம் நம் பூருவாசாரியர்களின் வியாக்கியானங்களில் விளங்கவில்லை இதிஹாஸ புராணங்களிலும் நமது சிற்றறிவுக்குப்புலப்படவில்லை. தக்ஷமுனிவனது சாபத்தால் க்ஷயமடைந்துவந்து சரணம்புகுந்த சந்திரனைச் சிவன் காத்ததாக வரலாறு இருப்பதனால் ப்ரயோஜ்ய கர்த்தாவாகிய சிவனது செயலை ப்ரயோஜக கர்த்தாவான திருமால்மேல் ஏற்றிக் கூறியிருப்பதாக ஒரு புலவர் எழுதியுள்ளார். பட்டர் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் சந்த்ரபுஷ்கரிணியைப்பற்றின ச்லோகத்தில் * யஸ்யா:, அப்யாஸதோபாம் அகமர்ஷணீநாம் சந்த்ரஸ்ஸாதாதீத்தோமவாப * என்று சந்திரன் சுத்தியடைந்த விருத்தாந்தம் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. சந்திரன் தக்ஷமுனிவனது புத்திரிகளாகிய அசுவினி முதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் விவாஹஞ் செய்துகொண்டு அவர்களுள் ரோஹிணி யென்பவளிடத்து மிகவும் காதல் கூர்ந்து அவளுடனே எப்பொழுதுங் கூடி வாழ்ந்திருக்க, மற்றை மகளிரின் வருத்தத்தை நோக்கிச் சினங்கொண்ட அம்முனிவன் அவனை 'க்ஷயமடைவாயாக' என்று சபிக்க, அச்சாபத்தால் சந்திரன் பதினாறுகலைவடிவாகவுள்ள தனது உடல் நாளடைவில் குறைபவனாகி அங்ஙனம் தனக்கு விரைவில் நேரக்கடவதான அழிவைப் போக்கிக் கொள்ளுதற்கு வேறு புகலிடமொன்றுங்காணாமல் சிந்தித்து ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தை யடைந்து அங்குள்ள நவதீர்த்தங்களிலொன்றும் கோயிலின் வடபுறத்திலுள்ளதுமான சந்திரபுஷ்கரிணியை யடைந்து அங்குத் தவம்புரிந்து அவத்யம் நீங்கப்பெற்றதாகக் கூறப்படுகிறது. இக்கதையை ஆழ்வார்கள் திருவுள்ளம்பற்றியிருக்கலாமென்று தோன்றுகின்றது. இதிஹாஸ புராணஜ்ஞர்களின் விமர்சம் இங்கு உரியது.

13. திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழியில் (5—8—5) * மாகமாநிலம் முழுதும் வந்திறைஞ்சும் மலரடிக்கண்ட மாமறையாளன், தோகைமாமயிலன்னவரின்பம் துற்றிலாமையின் அத்தவிங்கொழிந்து, போகம் நீயெய்திப் பின்னும் நம்மிடைக்கே போதுவாயென்ற பொன்னருள், எனக்குமாக வேண்டுமென்றடியிணையடைந்தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே * என்றொரு பாசுரமருளிச்செய்துள்ளார். ஓர் அந்தணன் எம்பெருமானுடைய திருவடிகளை ஸேவிக்கப்பெற்றதாகவும், அப்போது எம்பெருமான் அவ்வந்தணனை நோக்கி 'அப்பா! இன்னமும் உனக்கு விஷயபோகங்களில் ருசி குலையாததனால் இப்போதே நீ என் திருவடிகளில் கைங்கரியத்திற்கு ஆளல்லை; த்ருப்தியாமளவும் விஷயங்களை யனுபவித்துவிட்டுப் பிறகு நம் திருவடிவாரம் வந்து சேர்வாயாக' என்று பணித்ததாகவும் இப்பாட்டில் கதையொன்று அருளிச்செய்யப்பட்டுளது. இக்கதை வேறு எந்த ஆழ்வாராலும் கையாளப்பட்டிருக்கவில்லை ஆராய்ந்து பார்த்தவரையில் இதிஹாஸ புராணங்களிலும் நமது சிற்றறிவுக்கு எட்டவில்லை. இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் கதை சிறிது விவரிக்கப்பட்டிருக்கின்றது. அவ்வந்தணனுடைய பெயர் 'கோவிந்தஸ்வாமி' என்றும் காட்டப்பட்டிருக்கின்றது. அதனால் இக்கதை ஒரு புராணத்திலிருந்திருக்கவேண்டுமென்று தெரிகிறது. இதிஹாஸ புராண விசாரதர்கள் இதையும் விமர்சிக்க.

14. திருமங்கையாழ்வார் சிறிய திருமடலில் வாசவதத்தை யென்பாளுடைய கதையையும், பெரிய திருமடலில் வேகவதியென்றுரைக்குங் கன்னியொருத்தியின் கதையையும் சுருக்கமாக வருளிச்செய்துள்ளார். இவற்றைப்பற்றி நாம் நம்முடைய திவ்யார்த்த தீபிகை யுரையிலே யெழுதியிருப்பதுகிடக்க. இக்கதைகளின் ஆகரத்தைப்பற்றிப் பெரியார் ஆராய்ந்தருள்க.

மணவாள மாமுனிகள் உபதேசரத்தின மாலையிலே "ஆழ்வார்களேற்றம் அருளிச் செயலேற்றம், தாழ்வாதுமின்றியவைதாம் வளர்த்தோர்-ஏழ்பாருய்யவவர் செய்த வியாக்கியைகள் உள்ளதெல்லாம், வையமறியப்பகர்வோம் வாய்ந்து" என்றொரு பாசுரமருளிச் செய்துள்ளார். ஆழ்வார்களின் திவ்யப்பிரபந்தங்களுக்கு எந்தெந்த ஆசிரியர்கள் சுருக்கமாகவோ விரிவாகவோ வியாக்கியானம் செய்தருளியுள்ளார்களோ அதைப்பற்றி ஒன்றுவிடாமல் தாம் சொல்லப்போவதாக இப்பாட்டில் ப்ரதிஜ்ஞை செய்தருளியுள்ளார் மாமுனிகள். "வியாக்கியைகளைப் பகர்வோம்" என்னுமல் "வியாக்கியைகள் உள்ளதெல்லாம் பகர்வோம்" என்று அருளிச் செய்திருக்கையாலே, தம்முடைய காலம் வரையில் தாம்கண்ட திவ்யப்ரபந்த வியாக்கியானங்களை யெல்லாம் ஒன்றுவிடாமல் தெரிவிப்பதாக ப்ரதிஜ்ஞை பண்ணியுள்ளாரென்பது தேறுகின்றது. மேலே இன்னாரின்னார் வியாக்கியானஞ்செய்துள்ளார்களென்பதைச் சொல்லிக்கொண்டு போந்து "நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு, எஞ்சாமை யாவைக்குமில்லையே-தஞ்சீரால், வையகுருவின் தம்பி மன்னுமணவாள முனி, செய்யுமவை தாமுஞ்சில" என்ற பாட்டோடே இவ்விஷயத்தைத் தலைக்கட்டிப் போந்தார். மாமுனிகள் எந்த ஆசிரியர்களை திவ்யப்ரபந்த வ்யாக்கியாதாக்களாக எடுத்துக்காட்ட வில்லையோ அந்த ஆசிரியர்களை வ்யாக்யாதாவாக இசைய முடியுமா வென்பதை ப்ராமாணிகர்கள் பரிசீலிக்க.

## திருவாய்மொழிப் பிள்ளை வியாக்கியான விமர்சம்

மூலகாரர் சொல்லாது விட்டதை வியாக்யானகாரர்கள் சொல்லிவைப்பதுமுண்டு. அப்படிச் சொல்லியிருந்தாலும் ஏற்றுக்கொள்ளலாம். உபதேசரத்தினமாலைக்கு வியாக்கியானம் செய்தவர் பிள்ளைலோகாசார்யஜீயரொருவரே. அவர் "நஞ்சீயர் செய்த" என்கிற பாசுரத்தின் வியாக்கியானத்திலே "திருப்பாவைக்கும் கண்ணிநுண்சிறுத்தாம்புக்கும் நாயனார் செய்தருளினதாயும். திருவிருத்தத்துக்கு ஸ்வாபதேச வியாக்கியானம் ஜீயர் செய்தருளினதாயுங்கண்டது; இன்னமும் இவற்றை யொழியவுண்டாகில் கண்டு கொள்வது" என்று பணித்துள்ளார். ஆகவே பெரியாழ்வார் திருமொழிக்குத் திருவாய்மொழிப்பிள்ளை ஸாதித்ததாகச் சொல்லப்படுகிற வியாக்கியானம் மணவாளமாமுனிகளின் திருக்கண்ணிலும் படாமல், அவர்க்கு மிகவும் பிற்பட்டவரான பிள்ளைலோகஞ்சீயர் கண்ணிலும் படாமல் மறைந்திருந்ததாகக்கொள்ள வேண்டும்.

உப 49-ம் பாட்டில் "மேலோர்க்கீந்தாரவரேமிக்கு' என்றவிடத்து வியாக்கியானத்தில் "பிள்ளைதாமருளிச்செய்தருளின பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யானம்......" என்கிற பங்க்தியிருப்பதாகச் சிலர் எழுதுவதும் பிசகு. சென்னை ஸ்ரீ நிகேதமுத்ராக்ஷரசாலையில் நாலாயிர வியாக்கியானங்கள் பதிப்பிக்கப்பட்டபோது உபதேசரத்தினமாலை வியாக்கியானமும் தெலுங்கு லிபியில் 1877-ஹூத்தில் [இன்றைக்கு 70 வருஷங்களுக்கு முன்பு] பதிப்பிக்கப்பட்டிருக்கின்றது; அதில் சுத்தபாடமேயுள்ளது. (பக்கம் 91ல் வரி 23ல்) "ஜீயர் தாமருளிச்செய்தருளின பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம்" என்றேயுள்ளதை யாவருமெடுத்துக்காணலாம். தமிழ்ப்பதிப்பில் தவறுதலாக விழுந்திருக்கின்றதென்பதற்குத் தெலுங்கு பதிப்பே ஸாக்ஷி தமிழ்ப்பதிப்புத்தான் சுத்தமானதென்னில், அது ஸ்வவசன வ்யாஹதமே யென்று கொள்ளவேண்டுமத்தனை.

* மாற்றுத்தாய்சென்று பாசுரத்தில் மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தில் "நாலூர் பிள்ளை வியாக்கியான ப்ரக்ரியை, பிள்ளையிட்டருளின வியாக்யானப்ரக்ரியை' என்றதன் பொருள் பன்னிரு திங்களனுபவத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. அங்ஙனே பொருளன்று என்னில்; நாலூர் பிள்ளையும் பெரியாழ்வார் திருமொழிக்குப் பூர்த்தியாக ஒரு வியாக்கியானமருளிச்செய்ததாக இசையவேண்டும். அதையும் உபதேசரத்தினமாலையில் மாமுனிகள் தொடாதுவிட்டிட்டாரென்று குறைசொல்ல நேரும். பெரிய திருமொழிக்கு நஞ்சீயர் வியாக்கியானமிட்டார்; திருப்பாவைக்கு ஆய் வியாக்கியானமிட்டார்......என்றிங்ஙனே சொல்லுவதெல்லாம் ஆதாரமற்றவை. (தொடரும்)

# ஸ்ரீவைஷ்ணவ வுலகின் விஷாதம்

சென்னையைச்சேர்ந்த மாம்பலத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமதித்யாதி வங்கீபுரம் வாஸுதேவாசார்ய ஸ்வாமிகள் சென்ற உத்தராயணத்தின் முடிவு தினத்தில் இந்த லீலாவிபூதியைவிட்டு நித்யவிபூதிக்கெழுந்தருளினது உலகமறிந்ததே. இந்த ஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவவுலகுக்கு ஆற்றிவந்த தொண்டு அபரிமிதமாதலால் இவருடைய வியோகம் மிகவும் அஸஹ்யமானதே. இந்த ஸ்வாமி வேதாந்த தீபிகையென்னும் பத்திரிகைக்குப் பலகாலம் ஸம்பாதகராயிருந்துவந்தார். பிறகு ந்ருஸிம்ஹப்ரியாவுக்கும் ஸம்பாதகராயிருந்துவந்தார். ஆங்கிலத்திலும், ஸம்ஸ்கிருதத்திலும் சிறந்த பாண்டித்யம்பெற்று உயர்ந்த வியாஸங்களினால் ஆஸ்திகர்களின் நெஞ்சைக் கொள்ளைகொண்ட மஹாநுபாவர் இவர். ஒருவருடைய மனமும் புண்படாதபடியும் ப்ராமாணிகமான வழியில் பரிபூர்ணமான பற்றுதல்கொண்டும் வியாஸங்களை வித்வன்மனோஹரமாக எழுதிவந்த இப்பெரியாருடைய ஸ்தானத்தைப் பூர்த்தி செய்யக்கூடிய மஹான் நமக்குப் புலப்படவில்லை. உயர்ந்த ஞானத்தோடு சிறந்த அனுஷ்டானமும் நிரம்பி மஹர்ஷிப்ராயராய் விளங்கியிருந்த இந்த மஹநீயர் பரமபதப்ராப்திக்கு அர்ஹமான திருநக்ஷத்ரத்திலேயே விண்ணுலகு சேர்ந்தாரெனினும், இம்மண்ணுலகு விலையுயர்ந்தவொரு ரத்னத்தை யிழந்துவிட்டதே யென்று வருந்தாதாரில்லை. ஐஹிகமான செல்வத்தில் குறையற்றிருந்த விவர்க்கு ஆமுஷ்மிகமான செல்வமும் குறையற்றதேயாகும், இவருடைய திருக்குமாரர் தீபாதுத்பந்நப்ரதீபம்போல் விளங்குகின்றாரென்றறிந்து மகிழ்கிறோம்.

---

# ஆராய்ச்சியின் அழகிய முடிவு

உலகில் பல பல விஷயங்களில் பலவகைப்பட்ட ஆராய்ச்சிகள் தோன்றுவதுண்டு. அவ்வாராய்ச்சிகளில் விமர்சகர்களுக்கு அபிப்ராயபேதங்கள் தோன்றுவதும் ஸஹஜம். அவரவர்கள் தங்களுடைய ஆராய்ச்சிகளை இதர தூஷணம் சிறிதுமில்லாமல், யாவரும் மகிழ்ந்து புகழ்ந்து ஆதரிக்கக்கூடிய நிலைமையில் எழுதி

வெளியிடுவது யுக்தமான முறை. மதசம்பந்தமான விஷயங்களில் அபிப்ராயபேதங்களைப்பற்றி விமர்சித்து எழுத நேர்ந்தாலுங் கூட கோபதாபங்களையும் அவையடியான நிந்தைகளையும் வெகு தூரத்தில் விலக்கிவிட்டு ஸாத்விகமான முறையில் விஷயங்களிலுள்ள உபபத்திகளை மாத்திரம் பொறித்து வைப்பதுதான் விவேகிகளுக்கு உற்றது. ப்ராமாணிகர்களுக்கும் ரஸிகர்களுக்கும் ஹ்ருதயங்கமமாக விஷயங்களை நன்கு நிரூபித்து எழுதவல்லவர்களுடைய பேனா பரநிந்தையில் ப்ரவர்த்திக்கச் சிறிதும் ப்ரஸக்தியேயிராது. அல்லாதார் பரநிந்தையைச் செய்தே தங்கள் போதைப் போக்கப் பார்ப்பர்கள். இது உலகில் எங்குங் கண்ட வியல்பு. "சேஷம் கோபேந பூரயேத்".

பெரியவாச்சான்பிள்ளை ஆச்சான்பிள்ளை விஷயமான விசாரத்தில் ஆராய்ச்சிமுறையில், மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளில் ப்ரதிபத்தியுள்ளவர்கள் உகக்க எவ்வளவு நிரூபணங்களை நாம் காட்டவேணுமோ அவ்வளவும் காட்டியிருக்கின்றோமென்பதைக் கீழ் சஞ்சிகைகள் மூன்றிலும் மத்யஸ்த ப்ராமாணிக விவேகிகள் உள்ளபடி யுணர்ந்திருக்கின்றார்கள். பிறர் அவற்றுக்கு நேர் நின்று கோபதாபங்களின்றித் தங்களுடைய நிருபணங்களை அழகாக வெளியிடலாம். ஆனால் மிகவும் அநாவச்யகமாகப் பெரியார்களையும் வாசாமகோசரமாக நிந்திக்கப் புறப்பட்டுவிட்டார்களென்பதை நாம் அறிந்து இந்த விசாரத்தில் நின்றும் விலகிக்கொள்ளுகிறோம். விஷயம் ஒரு அத்யாய மெழுதிவிட்டு வசவு ஒன்பதத்யாய மெழுதலாமென்றும் நாம் தெரிவித்திருக்கிறோம். விஷயவிமர்ச லேசமுமில்லாமல் * கேட்பார் செவி சுடு கீழ்மை வசவுகளே வையக் கற்ற மஹான்களோடு இனி நமக்குப் பணியில்லையென்று நிற்கிறோம்.

யுக்தா யுக்தங்களை நிர்மத்ஸரமாக விமர்சித்து உண்மை யுணர்ந்து உகக்கவல்ல ப்ராமாணிக ரஸிகர்கள் எங்கும் எந்நாளும் உள்ளார்களாதலால் அப்படிப்பட்டவர்களுடைய திருவுள்ளத்தில் எது படுகிறதோ அதுவே நமக்குத் தஞ்சம்.

இவ்விதழிலுள்ள வியாஸங்களையெல்லாம் பூர்த்தியாக வாசித்துப் பலவுண்மைகளையுணருக.

---

ஸ்ரீ:

# உத்தமர்—மத்யமர்—அதமர்—அதமாதமர்.

உலகிலுள்ள பிராணிகள் யாவர்க்கும் மேற்குறித்த நான்குவகையான வகுப்புகளுண்டென்று பெரியார்களின் நூல்களினால் அறிகின்றோம். இதைப்பற்றின விவரணங்களை நாம் பலவிதமாகக் காண்கின்றோம். நினைவுக்கு வந்த சில விதங்களை ஈண்டெடுத்துரைக்க விரும்புகின்றோம்.

1. வேதாந்த சாஸ்திரங்களைப் போதிக்கின்ற ஆசிரியர்—உத்தமர்; கர்மகாண்டமான வேத பாகங்களைப் போதிக்கின்ற ஆசிரியர்—மத்யமர்; சிருங்கார ரஸப்ரதானமான காவ்யநாடகங்களைப் போதிப்பவர்—அதமர். *புலையறமாகி நின்ற புத்தொடு சமணமெல்லாம் கலையறக் கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோதாம்* என்று திருமாலையில் இழித்துரைக்கப்பட்ட ஜைந பௌத்தாதிக்ரந்தங்களைப் போதிப்பவர்கள்—அதமாதமர்.

2. பிறர் விரும்பாமலிருக்கப் பாத்திரமறிந்து அஹங்காரலேசமுமில்லாமல் உவந்து தானம் செய்பவர்—உத்தமர். பிறருடைய தொந்தரவுக்காக வருத்தத்துடன் தானம் செய்பவர்—மத்தியமர். ஐயமும் பிச்சையும் அடியோடு இட்டறியாதவர்—அதமர். ஒருவர்க்கும் ஒன்றுமிடாமலிருந்தும் 'அவர்க்கு அது கொடுத்தோம், இவர்க்கு இது கொடுத்தோம்' என்று வெறும் பொய்யாகப் பெருமைபேசிக் கொள்பவர்-அதமாதமர்.

3. சிஷ்யர்களின் அனர்த்தங்கண்டு, அவர்களுடைய அநுவ்ருத்தி நிர்ப்பந்தங்களில்லாமலே "பயனன்றாகிலும் பாங்கலராகிலும் செயல்நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்" என்றாப்போலே தம்முடைய பரமக்ருபையடியாகவே உபதேசிப்பார்-உத்தமர். அநுவ்ருத்திப்ரஸந்நாசார்யர்களாய்க் கொண்டு சிஷ்யர்களின் அநுவ்ருத்தி நிர்ப்பந்தங்கள் காரணமாக வருந்தியுபதேசிப்பவர்-மத்யமர். எவ்வளவு அநுவர்த்தித்தாலும் ஒன்றும் உபதேசியாதவர்- அதமர். தாமாகவேயோ அநுவ்ருத்திப்ரஸந்நர்களாகவோ உபதேசிக்குமிடத்து உயர்கதிக்குறுப்பான அர்த்தங்களையுபதேசியாதே விப்ரலிப்ஸை முதலிய காரணங்களினால் அதோகதிக்கு உறுப்பான அர்த்தங்களைச் சொல்லிக்கொடுக்க நினைப்பவர்கள்—அதமாதமர்.

4. பணத்தைக் காஷ்ட லோஷ்டமாக நினைத்திருப்பவர்—உத்தமர். ஸத்பாத்ர விநியோகம் முதலிய தருமகாரியங்களுக்காகப் பணத்தை யீட்டுபவர்—மத்யமர். பணத்தையீட்டித் தாமுமுண்ணாதே ஒருவர்க்கு மொன்றுமீயாதே மறைத்துவைப்பவர்—அதமாதமர்.

5. பிறருடைய குற்றங்களையும் நற்றமாகக் காண்பவர்—உத்தமர். குற்றங்களைக் குற்றமாகவும் நற்றங்களை நற்றமாகவும் காண்பவர்—மத்யமர். நற்றங்களைச்சிறிதுங் காணாது குற்றங்களையே காண்பவர்—அதமர். நற்றங்களையும் குற்றமாகவேகண்டு கூறுமவர்—அதமாதமர்.

6. பிறரை நிந்திக்கவேண்டிய காரணங்கள் கனக்க இருந்தாலும் நிந்தையை நெஞ்சிலும் நினையாதவர்—உத்தமர். நிந்திக்கவேண்டும்போது நிந்திப்பதும், துதிக்கவேண்டும்போது துதிப்பதுஞ் செய்வார்—மத்யமர். துதிப்பதென்பதைக் கனவிலுமறியாதே நிந்தையொன்றிலேயே பழகுபவர்—அதமர். அந்தநிந்தைகளைச் சாமானியர்களிடத்திலே செலுத்தாமல், உலகம் நிறைந்த புகழாளர் பக்கலிலேயே நிஷ்காரணமாகச் செலுத்துமவர்—அதமாதமர்.

7. ஞான மனுட்டானமிவை நன்றாகவே யுடையவர்—உத்தமர்; ஞானமின்றி அனுட்டானம் மாத்திரமுடையவர்—மத்யமர்; அனுட்டானம் சிறிதுமின்றி ஞானம்மாத்திரமுடையவர்—அதமர். ஞானமோ அனுட்டானமோ எதுவுமில்லாதவர்—அதமாதமர்.

**மற்றும் இங்ஙனே காண்க.**

---

# உத்தம ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம்.

உத்தம வைஷ்ணவர்களின் லக்ஷணம் என்றாவது, ஸ்ரீவைஷ்ணவர்களின் உத்தம லக்ஷணம் என்றாவது மகுடத்திற்குப் பொருள் கொள்க. ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தை நம்முடைய சாஸ்த்ரங்கள் பலவகையாக வகுத்துள்ளன. * யே கண்டலக்ந துலஸீ நளிநாக்ஷமாலா: யே பாஹுமூல பரிசிஹ்நித சங்கசக்ரா:, யே வா லலாடபலகே லஸதூர்த்வ புண்ட்ரா: தே வைஷ்ணவா: புவநம் ஆசு பவித்ரயந்தி * என்கிற வொரு ப்ரமாணவசனம் உலகில் ப்ரஸித்தமாகவுள்ளது. இந்த ச்லோகத்தில், வெளிப்படையாகக் காணக்கூடிய லக்ஷணங்கள் சொல்லப்பட்டுள்ளனவேயன்றி அந்தரங்க லக்ஷணமொன்றும் சொல்லப்பட்டிருக்கவில்லை. துளஸீநளிநாக்ஷமாலைகளாகிற திருமணித்தாவடங்களைக் கழுத்தில் அணிந்துகொள்ளுதல் சங்கசக்ராங்கனமாகிற திருவிலச்சினை பெறுதல், நெற்றியில் பளபளவென்று திருமண்காப்பணிதல் ஆகியவிவற்றையுடையவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள்—என்று மேலெடுத்துக்காட்டிய ச்லோகத்தினாலறிகின்றோம். இநத பாஹ்ய லக்ஷணங்கள் அமையவேண்டியது அவசியமேயானாலும் இதைக்காட்டிலும் மிக முக்கியமானது அந்தரங்க லக்ஷணமாகும்.

அந்தரங்கலக்ஷணம் பலவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது நூல்களில். “பிறர்நோவுகண்டு ஐயோவென்றிரங்கியிருப்பதுதான் ஸ்ரீவைஷ்ணவத்வமென்றும், அஃதில்லாதவர்கள் வேறு எத்தனை லக்ஷணங்கள் அமையப்பெற்றிருந்தாலும் அவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களல்லரென்றும் நஞ்சீயர் அருளிச்செய்வராம்.”

பிள்ளை லோகாசார்யர் முமுக்ஷுப்படி த்வயப்ரகரணத்தின் முதல்சூர்ணையை வெகு அற்புதமாக அமைத்தருளியிருக்கின்றார் ;—

“புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறுதப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணானுபவ கைங்கர்யங்களே போதுபோக்காகையும், இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்ற மறிந்து உகந்திருக்கையும், திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகையும், ஆசார்யப்ரேமம் கனத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப்போருகையும், ஜ்ஞானமும் விரக்தியும் சாந்தியுமுடையனாயிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதம்”

என்கிறவிந்த சூர்ணிகை ஸ்ரீவைஷ்ணலக்ஷணம் சொல்லவந்ததன்றாகிலும் இத்தனையும் லக்ஷணமென்றே கொள்ளவும்தகும். இவற்றினிடையில் ஒரு வாக்கியம் விலையுயர்ந்த மாணிக்கம்போல் அமைந்திருக்கின்றது ; அதாவது—“இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந்து உகந்திருக்கையும்” என்பது. புறம்புண்டானவென்றுதொடங்கிக் கீழ்ச்சொன்னவையெல்லாம் தமக்கு உண்டாகாமற் போனாலும் அவையுண்டாயிருக்கப்பெற்ற ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டால் “இந்தளத்திலே தாமரை பூத்தாற் போலே இவ்விருள் தருமா ஞாலத்திலே இப்படியும் சிலர் உண்டாவதே!” என்று ஆச்சரியப்பட்டு அவர்களிடத்திலே நெஞ்சுகனிந்திருக்கை என்பது பொருள். இவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் அருமருந்தாகவருளிச் செய்திருக்கின்ற வொரு ஸ்ரீஸூக்தி காண்மின்—“கீழ்ச்சொன்னவையெல்லா முண்டானாலும் உண்டாக வரிதாயிருப்பதொன்றிறேயிது” என்று.

உண்மையான ஸ்ரீவைஷ்ணவர்களின் ஏற்றமறிந்து உகந்திருக்கையென்கிறவொன்று வாய்ந்தால் போதுமென்பது மணவாள மாமுனிகளின் திருவுள்ளமாகக் காண்கிறது. உண்மையில் பிறர் மினுக்கம் பொறாமையென்பது மருந்தில்லாத மஹா வியாதி. இந்த வியாதிக்குத் தப்பிப்பிழைப்பாருளரேல் அவர்களே வைஷ்ணவர்களென்று திண்ணமாகக் கெள்ளலாம்.

வேதாந்த தேசிகர் ரஹஸ்யத்ரய ஸாரத்திலே அருமையான வொரு ச்லோகமெடுத்துக்காட்டி ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் கூறியுள்ளார் ; “ரூக்ஷாக்ஷராணி ச்ருண்வந் வை ததா பாகவதேரிதம், ப்ரணாமபூர்வகம் க்ஷாந்த்யா யோ வதேத் வைஷ்ணவோ ஹி ஸ:.” என்கிற விந்த ப்ரமாண வசனம் மிகச்சிறந்த பொருளுடையது. ஒரு பாகவதர் மிகக்கடுமையாக நிந்திக்க நேர்ந்தாலும் எதிர்த்து அடர்த்துப்பேசாமல் ‘தேவரீர் நிந்திப்பதற்குறுப்பான தோஷங்களெல்லாம் ஸத்யமாய் அடியேனிடத்தி

லுள்ளவையே ; பொறுத்தருளவேணும்' என்று விநயமுடன் தெண்டனிட்டு விண்ணப்பம் செய்பவனே வைஷ்ணவன் என்று இந்த ச்லோகத்தினால் கூறப்படுகின்றது. உண்மையில் இதுதான் உத்தம வைஷ்ணவலக்ஷணமாகும். பிறர் ஒரு நிந்தை செய்தால் 'ஒன்றுக்கு ஒன்பது' என்கிற கணக்கிலே சராமாரியாக பதில் நிந்தைகளைப் பொழிவார் மலிந்துள்ள இவ்வுலகில் மேற்சொன்னவகையான அதிகாரி கிடைப்பது மிகவுமரிதே.

"நீசனேன் நிறையொன்றுமிலேன்" என்றும் "பாவமே செய்து பாவியானேன்" என்றும் இப்படியுள்ள பாசுரங்களையும் "அபராதஸஹஸ்ரபாஜநம்" "அமர்யாத: க்ஷுத்ர:" என்றிப்படியுள்ள ச்லோகங்களையும் வாயாரச் சொல்லிக் கண்ணுங்கண்ணீருமாயிருந்து 'என்னைவிட நீசனுண்டா? என்னைவிட பாபியுண்டா?' என்று கதறுமவர்களை நாம் எங்கும் மிகைய்கக் காணமுடியும். ஆனால் அவர்களுடைய அர்த்த அனுஸந்தானம் உண்மைதானா? நாபியிலிருந்து வருவதுதானா? என்பதை ஒரு க்ஷணத்தில் பரீக்ஷித்து அறிந்து விடமுடியும். 'நான் நீசன், நான் பாபி' என்று சொல்லிக்கொண்டவர் "நீர் நீசர், நீர்பாபி" என்று பிறர்வாயால் வெளிவருஞ் சொற்களைத் தேனும் பாலுமமுதுமாகக் கொள்ளவேண்டுமன்றோ? அது தான் ஸம்பவிக்கமாட்டாதது. 'நீர் நீசர்' என்று பிறர் சொன்னவுடனே கண்கள் சிவந்து வாயுஞ்சிவந்து பல்லைக்கடித்துப் பரமஹேயமான சொற்களைப் பொழிந்து கன்னத்திலறையக் காதலிப்பார் தாம் எங்கும் காணக்கூடியவர்கள். தம் வாயினால் தாம் செய்யும் நைச்யாநுஸந்தானங்களைத் தம்மைப்பற்றி பிறர் வாயினாலும் கேட்டு ஆனந்தம் பொங்கியிருப்பவர் யாவரோ அவரே உண்மை ஸ்ரீவைஷ்ணவரென்று கொள்ளத்தக்கவர்.

---

# பெரியாழ்வாரும் பெரியவாச்சான் பிள்ளையும்.

1. ஆழ்வார்களில் பட்டர்பிரானுடைய திருநாமம் பெரியாழ்வாரென்று ப்ரஸித்தமாயுள்ளது. சிறியாழ்வாரொருவரிருந்து அவருடைய வ்யாவ்ருத்தி ஸித்திக்காகப் பெரியாழ்வாரென்கிறதென்று தானே கொள்ளவேண்டும்; பெரியாழ்வாருடைய காலத்தில் சிறியாழ்வாரென்று ஒருவரிருந்ததுண்டோ? என்னுமிவ்வாராய்ச்சி ப்ராப்தமாகிறது. இதில் விவேககுசலர்களுக்குப் பரம த்ருப்தியுண்டாம்படி விளக்குவோம்.

2. பட்டர்பிரானுக்குப் பெரியாழ்வாரென்று திருநாமம் விளைந்ததன் காரணத்தை ஆசிரியர்களிருவர் இரண்டுவகையாக வெளியிட்டுள்ளார்கள். மணவாளமாமுனிகள் உபதேசரத்தினமாலையில் "மங்களாசாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள், தங்களார்வத்தளவு தானன்றிப்—பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான், பெரியாழ்வாரென்னும் பெயர்" என்கிற பாசுரமருளிச் செய்திருப்பது யாவருமறிந்தது. மங்களாசாஸனத்தில் ஒப்புயர்வற்ற பரிவு காரணமாகவே இவ்வாழ்வார்க்குப் பெரிய என்கிற சிறப்பு விருது விளைந்ததென்று இப்பாசுரத்தினால் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

3. வேதாந்த தேசிகர் கோதாஸ்துதியில் "தாதஸ் து தே மதுபித: .....லேபே மஹத்தர பதாநுகுண்ம் ப்ரஸாதம்" என்கிற ச்லோகத்தில் ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை ஆழ்வார் எம்பெருமானுக்குச் சாத்தி அதனாலே பெரிய என்னும் சிறப்பு விருதுபெற்றதாகக் கூறியுள்ளார். இரண்டும் ப்ராமாணிகமேயென்று கொள்வோம். இங்ஙனே காரண விசேஷத்தினால் பெரிய என்கிற பட்டப்பெயர் தோன்றியதாக ஸ்ரீவைஷ்ணவவுலகம் முழுவதும் நிஸ்ஸந்தேஹமாகத் தெரிந்து கொண்டிருக்கின்றது. இங்ஙனம் தெரிந்துகொண்டவர்கள் சிறியாழ்வாரொருவரை வ்யாவர்த்திக்கைக்காகப் பெரியாழ்வாரென்கிறது என்று கொள்ள ப்ரஸக்தியே கிடையாது.

4. இனிப் பெரியவாச்சான் பிள்ளையைப்பற்றிப் பார்ப்போம். முன்னோர்களின் க்ரந்தங்களில் பெரியவாச்சான்பிள்ளை என்று ஸவிசேஷமாகவும், ஆச்சான்பிள்ளை யென்று நிர்விசேஷமாகவும் நிர்தேசங்களிருப்பது அபலபிக்க முடியாதது. ஒரு வ்யக்தியை நோக்கியே இவ்விருவகையான நிர்தேசமும்-என்று கொள்வதற்கு இடமில்லாதபடிக்கு ஆச்சான்பிள்ளை வேறு வ்யக்தி பெரியவாச்சான்பிள்ளை வேறு வ்யக்தி என்று ஸ்பஷ்டமாகக் காட்டியே மணவாளமாமுனிகள் ஸ்ரீஸூக்தி விந்யாஸம் செய்தருளியிருக்கிறாரென்பதும் அபலபிக்க முடியாதது. இத்தகைய ஸ்ரீஸூக்தி விந்யாஸம் எவ்விடத்திலுள்ளது

என்று ஆராய்ச்சி விளையுமளவில், விவாதக்ரஸ்தமான இடத்தைவிட்டு நிர்விவாதமான இடத்தைக் காட்டுகிறோம். உபதேச ரத்தினமாலையில் பெரியவாச்சான்பிள்ளையென்றே பலமுறையும் அருளிச் செய்த மணவாளமாமுனிகள், பெரியாழ்வார் திருமொழி (4-9-4) * மாற்றுத்தாய் சென்று பாசுர வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளையைக் காட்டிலும் வேறுபட்ட வ்யக்தியென்று யாவரு மிசைந்த வோராசார்யரை ஆச்சான்பிள்ளை யென்று நிர்தேசித்திருக்கிறார். இதனால், ஆச்சான்பிள்ளை யென்று நிர்விசேஷமாக வழங்கப்பட்டு வந்தவொரு வ்யக்தியும் பெரியவாச்சான் பிள்ளையென்று ஸவி சேஷமாகவழங்கப்பட்டு வந்தவொருவ்யக்தியும் மாமுனிகளின் திருவுள்ளத்திலே குடிகொண்டிருந் தார்களென்பது அசைக்க முடியாமல் தேறுகின்றவிஷயம்.

5. ஆகவே, ஆச்சான்பிள்ளையென்கிற வ்யக்தியிற் காட்டிலும் வ்யாவ்ருத்தி ஸித்திக்காகவே பெரியவாச்சான்பிள்ளை யென்கிற வ்யபதேச முண்டாயிற்றென்று அறிய வெளிதாயிற்று. இந்த அறிவு நெஞ்சிலே திடமாகக் குடிகொண்டிருக்கப்பெற்றவர்கள் மணவாளமாமுனிகளின் க்ரந்தங் களிலே பெரிவாச்சான் பிள்ளையென்றும் ஆச்சான்பிள்ளையென்றும் சப்தபேதமிருப்பதைக் கண்டால் இவ்விருவரும் வெவ்வேறு வ்யக்திகளே யென்று கொள்வதோடுகூட, ஆச்சான்பிள்ளையைக் காட்டிலும் வ்யாவ்ருத்தி ஸித்திக்காகவே பெரியவாச்சான்பிள்ளை யென்கிற வ்யபதேச முண்டாயிற்றென்றும் திண்ண மாக வெண்ணுவர்கள். பெரியாழ்வாரென வருமிடங்களில் இப்படி கொள்வதற்கு ப்ரஸக்தியே யில்லை. ஏனென்னில்; "பெரியாழ்வார் அப்படியருளிச் செய்தார்; ஆழ்வார் இப்படியருளிச்செய் தார்" என்று ஓராசார்யரும் ஓரிடத்திலுமெழுதியிருக்கவில்லை. அப்படி யெழுதுவது ஸம்பாவிதமு மன்று. இங்ஙனன்றிக்கே "பெரியவாச்சான்பிள்ளை அது அருளிச்செய்தார்; ஆச்சான்பிள்ளை இது அருளிச்செய்தார்" என்கிற ஸ்ரீஸூக்தி விந்யாஸம் [சிறிது முன்னே விவரித்தபடி] ஸ்பஷ்டமாக இருக்கையாலே பெரியாழ்வாரைப்பற்றின ஸ்மரணம் இங்குண்டாவதற்கு ப்ரஸக்தியே கிடையாது.

6. இனி, திருமலை நம்பி பெரிய திருமலைநம்பி என்கிற வ்யபதேசங்களைப்பற்றி யெடுத்துக் கொள்வோம். திருமலைநம்பியென்று ஒரு வ்யக்தியும் பெரிய திருமலை நம்பியென்று வேறொரு வ்யக்தி யும் இருந்ததாக ப்ரமாணங்களினால் ப்ரதிபந்நமாகிறதா வென்பதை ப்ராமணிகர்கள் நிரூபிக்கவேணும். நாம் நிரூபிக்கும் விஷயமின்னதென்பதை நன்கு நெஞ்சில் வாங்கிக்கொள்ள சக்தியுடையவர்களுக்கு நாம் தெரிவிக்கிறோமிங்கு. ஆச்சான்பிள்ளையென்று தனிப்படவும் பெரியவாச்சான் பிள்ளையென்று தனிப் படவும் அருளிச்செய்யப்பட்டிருப்பது போன்ற [ஸஜாதீயமான] விஷயமொன்றை யெடுத்துக்காட்ட முன்வரவேண்டுமென்றே தெளிவுபெற விரும்புமவர்கள். அப்படியொரு விஷயம் எடுத்துக்காட்ட நேர்ந்ததேயானால் அங்கு பெரிய என்கிற விசேஷணம் வ்யாவ்ருத்தி ஸித்திக்காகவே யென்பதை அநாயாஸமாகவுணர நேரும்.

7. ஸம்ப்ரதாயத்தில் கோயில் என்று சொன்னோமாகில் ஸ்ரீரங்கத்தைக் காட்டுமென்கிற ப்ரஸித்தியுள்ளது. கோயில் திருமலை பெருமாள்கோயில் இத்யாதி அநாதிவ்யவஹாரங்களினாலும் க்ரந்தங்களில் பெரியார் எழுதிவருகிற முறைகளினாலும் இதனை யறிகின்றோம். பெரியகோயில் என் கிற வ்யவஹாரமும் தொன்றுதொட்டே யுள்ளது. * மருவிய பெரியகோயில் மதிள்திருவரங்கம் * என்பது திருமாலை. இங்குப் பெரிய என்கிற அடைமொழி வ்யாவ்ருத்தி ஸித்திக்காகவென்று சொல்லவேண்டிய அவச்யமில்லை' சொல்லுவாருமில்லை. நாடுநகரமும் நன்கறிந்த பெருமையையே, காட்டிநிற்குமிங்குப் பெரியவென்கிறசொல்.

8. மற்றொன்று மிங்கு நினைப்பூட்டுகிறோம். ஸம்ப்ரதாயத்தில் கருத்மானைப் பெரிய திருவடி யென்றும் அனுமானைச் சிறிய திருவடி யென்றும் வழங்குவது யாவருமறிந்தது. இங்ஙனே வழங்கு வது வ்யவஹாரத்தில் மாத்திரமன்றிக்கே திருக்குருகைப் பிரான் பிள்ளான் முதலான முன்னோர் களின் க்ரந்தங்களிலுமேறியுள்ளது ஆனால், நம் ஆசார்யர்கள் பெரும்பாலும் [பெரிய சிறிய என்னு மடைமொழிகளை யிடாமல்] திருவடி யென்றே யெழுதி யுள்ளார்கள். அனுமானைப்பற்றின விடங் களிலும் திருவடியென்றே யெழுதுவர். கருத்மானைப்பற்றின விடங்களிலும் திருவடி யென்றே யெழுதுவர். இப்படி யெழுதினால் இங்கு ஹனுமான் விவக்ஷிதனா? கருத்மான் விவக்ஷிதனா வென்று தெரிந்து கொள்ள முடியாமற் போகுமே யென்று தளும்புவார் யாருமில்லை. ஏனென்னில், "திரு வடி கடல் கடந்து இலங்கை புக்கு" என்றாற்போலே வருமிடங்களில் திருவடியென்றது ஹனு மானை யென்று எளிதாகத் தெரிந்து கொள்ளுகிறோம்; "திருவடியின் சிறகின்கீழே" "திருவடியை மேற்கொண்டு பொய்கைக் கரையிலே வந்து யானைக்கருள் செய்து" என்றாற்போல வருமிடங்களில் திருவடி யென்றது கருத்மானை யென்று அநாயாஸமாக அறிந்து கொள்ளுகிறோம். "அர்த்தாத் ப்ர

கரணாத் லிங்காத் ஔசித்யாத் அர்த்த நிர்ணயஃ ” என்று சாஸ்த்ரஜ்ஞர்களும் காட்டின கட்டளையிது. இதைத் திருவுள்ளத்திற் கொண்டே நம் ஆசார்யர்கள் திருநாம நிர்தேசங்களைச் செய்தருளி வருகிறார்கள். இதில் மிகவும் ஜாகரூகர் மணவாளமாமுனிகள். இது அவருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் ஸததபரிசயம் செய்வார்க்கே அறிய நிலமானது.

9. மாமுனிகளுக்கு முன்பு வாதிகேஸரி ஜீயர் முதலானோர் தத்வதீப தீபப்ரகாசம் போன்ற ரஹஸ்ய க்ரந்தங்களை யருளிச் செய்துள்ளார்கள். அவை பிள்ளைலோகாசார்யருடைய முமுக்ஷுப்படிபோல் ஸூத்ரசைலியாகவன்றிக்கே வ்யாக்யான சைலியாகவே அமைந்திருப்பவை. அந்த க்ரந்தங்களில் பெரிய வாச்சான் பிள்ளை யினுடையவோ ஆச்சான் பிள்ளை யினுடையவோ மற்றொரு பிள்ளை யினுடையவோ ஸ்ரீஸூக்திகளை மேற்கோளாக எடுத்துக்காட்ட வேண்டிய ப்ரமேயமிருந்தும் அவை சிறிதும் எடுத்துக்காட்டப்படவில்லை. இதற்குக் காரண விசாரம் நமக்கு அநவஸரம். மணவாளமாமுனிகள் “ முன்னவராம் நம் குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம் முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம் ” என்று ஆர்த்திப் பிரபந்தத்திலருளிச் செய்தபடியே பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளில் விசேஷப்பற்றுள்ளவராதலால், இவரொருவரே தாம் விசதமாக நிரூபித்தருளும் விஷயங்களுக்கு ஸம்வாத ப்ரமாணமாகப் பல ஆசார்யர்களின் வசனங்களையும் அடிக்கடி மேற்கோளாகக் கொடுத்து ரஸப்படுத்தியருள்பவர். அந்தந்த ஆசார்யர்களருளிச்செய்துள்ள அர்த்தங்களை அவரவர்களின் ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு காட்டாமல் தாம் அபூர்வமாக எழுதுவதுபோல் தம்முடைய வாக்காலேயே காட்டிவிடலாமாயினும், வேறு சிலர்க்குப் பரிசிதமான இந்த வழியில் மாமுனிகள் சிறிதும் ப்ரவேசமுடையவரல்லர் ; இப்பெருங்குணத்திலீடுபட்டே “ பொய்யிலாத மணவாள மாமுனி புந்திவாழி ” என்று மர்மஜ்ஞரான அடியார்கள் விசேஷித்து வாழ்த்தினர்.

10. இத்தகைய பெருமை வாய்ந்த மாமுனிகள் தம்முடைய வியாக்கியான க்ரந்தங்களில் பெரிய வாச்சான் பிள்ளை யருளிய திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்களிலிருந்தும், ஆங்காங்கு விஷயங்களை யெடுத்துக் காட்டியருளுகிறார். அவ்விடங்களிலெல்லாம் நியமேந “ பூர்வர்கள் அருளிச்செய்து வைத்தார்கள் ” என்றே யெழுதியுள்ளார் பெரிய வாச்சான் பிள்ளை யருளிச் செய்தாரென்று ஓரிடத்திலுமெழுத வில்லை. [இது நமது அஷ்டாத்யாயி 9—12 பாராக்களில் விசதம்.] “ அர்த்தமாத்ராலாகவேந புத்ரோத்ஸவம் மந்யந்தே வையாகரணா: ” என்றாற்போலே, பெரிய வாச்சான் பிள்ளையென்று பெரிய சொல்லையிட்டு ச்ரமப்படாமல் பூருவர்கள் என்று சிறிய சொல்லையிட்டார் என்றோ, வேறு விதமாகவோ, யார் எப்படி நிர்வஹித்தாலும் நிர்வஹிக்க. மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியுள்ள விதம் யாவரும் காண்பது. பூருவர்கள் என்றாலும் பெரிய வாச்சான் பிள்ளை தாம் விவக்ஷிதரென்பது யாவரு மிசைந்ததே. உபதேச ரத்தின மாலையில் ஸ்பஷ்ட விவரண முள்ளதன்றோ.

11. அவ்வுபதேச ரத்தின மாலையில் திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்களின் அவதரணத்தைப் பற்றி யருளிச்செய்தபின் ரஹஸ்ய க்ரந்தப் பெருமையைப் பேசத் தொடங்கினார் * அன்ன புகழ் முடும்பை யண்ணலுலகாசிரியன் * என்ற பாட்டு முதலாக. கீழே “ பெரிய வாச்சான் பிள்ளை பின்புள்ளவைக்குந் தெரிய ” என்ற பாசுரத்தினால் திவ்ய ப்ரபந்தார்த்த ஜ்ஞானத்திற்குப் பெரிய வாச்சான் பிள்ளை திருவடி யல்லது தஞ்சமில்லை யென்று கொண்டாடியிருப்பது உலகமறிந்தது. அப்படிப்பட்ட பெரிய வாச்சான் பிள்ளையே பரந்த ரஹஸ்யமிட்டு ரஹஸ்யார்த்தங்களையும் விபுலமாக அருளிச் செய்தவராயிருந்தால் அந்த வுபதேச ரத்தின மாலையில் மணவாள மாமுனிகள் என்ன செய்திருக்கவேண்டு மென்பதை நாமெடுத்துரைக்கவேண்டுமோ ? ஒவ்வொருவருமறிந்து கொள்ள முடியாதோ ? * அன்ன புகழ் முடும்பை முதலான எழுபாசுரங்களை நீக்கியோ அல்லது அவற்றுக்கு முன்போ ரஹஸ்யார்த்த விஜ்ஞானத்திற்கும் பெரிய வாச்சான் பிள்ளை திருவடிகளே தஞ்சமென்று ஒரு பாசுரமாவது அமைத்திருக்க வேண்டியது அவச்யமன்றோ. ஏன் அது இல்லை யென்று ஒருவரை யொருவர் கேட்கவேண்டா. அவரவர் நெஞ்சார விமர்சித்துப் பார்த்து உணரவேணும்.

12. பிள்ளை லோகாசார்யருடைய முமுக்ஷுப்படியிலும் தத்வத்ரயத்திலுமுள்ள விஷயங்களைக் காட்டிலும் அதிகமான பல விஷயங்கள் பரந்த ரஹஸ்யத்திலும் தத்வத்ரய விவரணத்திலு முள்ளன. மாணிக்க மாலை முதலிய ரஹஸ்யங்களில் ஸ்ரீவசநபூஷணார்த்த விசேஷங்களும் பல காணப்படுகின்றன. இந்த க்ரந்தங்களெல்லாம் பெரிய வாச்சான் பிள்ளை யருளிச்செய்தவையாயிருந்தால் நம்பிள்ளை திருவடிகளில் நேராகக் கேட்ட அவருடைய அருமருந்தன்ன க்ரந்தங்களையே யன்றோ அன்று தொட்டுக் காலக்ஷேப க்ரந்தமாகக் கொண்டிருப்பார்கள். அச்சுக்கூடம் தலைப்படுவதற்கு முன்பு இந்த

க்ரந்தங்கள் அவதரித்திருப்பது கூடப் பெரும்பாலும் தெரியாதன்றோ. அத்யாபி நூற்றில் தொண்ணூறு பேர்களுக்குத் தெரியாதன்றோ.

13. மணவாள மாமுனிகள் மிகச் சிறிய க்ரந்தமாகிய முமுக்ஷுப்படிக்கும் தத்வத்ரயத்திற்கும் வியாக்கியான மருளி இவற்றைக் காலக்ஷேப க்ரந்தங்களாக நியமிப்பதை விட்டு, மிக விரிவாகவும் வியாக்கியான நிரபேக்ஷமாகவுமுள்ள பரந்த ரஹஸ்யாதிகளையே [அவச்யமான விடங்களுக்கு ஸ்வல்ப விவரண மிட்டு] காலக்ஷேப க்ரந்தங்களாக நியமித்திருக்கவேண்டுமே. அப்படி நியமித்தருளாமைக்குக் காரணம் உண்மையில் அவை பிள்ளைலோகாசார்யருடைய ரஹஸ்யங்கள் அவதரித்த பிறகு தோன்றியவை—என்பதே. முன்னமே தோன்றியிருந்தால்—பெரிய வாச்சான் பிள்ளை யருளிச் செய்தவையுமாயிருந்தால் அவருடைய ரஹஸ்ய க்ரந்தங்களான அவையே காலக்ஷேப க்ரந்தமாக வந்திருக்குமென்பதில் ஸந்தேஹமுண்டோ? என்ன குறை கண்டு அவற்றை விலக்கி யிருக்கவேண்டும். பெரிய வாச்சான் பிள்ளை யிடத்தில் விசேஷ பக்தி யுள்ளவர்களாக நினைப்பாருடைய பரம்பரையிலுமில்லையே, இதனை ஆர அமர ஆராய வல்லவர்கள் தம்தம் ஆத்மா த்ருப்தியடைய ஸமாதானம் பெற வேண்டுமே. பெரியார்களுடைய ஸித்தாந்தத்தைப் பின்பற்றினாலல்லது வர்ஷ சதமானாலும் ஸமாதானம் பெற முடியாதன்றோ. ஆச்சான் பிள்ளை ஸாதித்த க்ரந்தங்கள்—பிள்ளைலோகாசார்யருடைய ஸ்ரீஸூக்திகள் விபுல ப்ரசார மடைந்த பிறகு தோன்றினமையாலேயே பகல் விளக்கும் மின்மினியு மென்னும்படி நின்று உள்ளடங்கிப் போயின. ஆனாலும் மணவாளமாமுனிகள் ஸகலாசார்ய ஸ்ரீஸூக்திகளிலுமுள்ள பரிவினாலே அவற்றையுமெடுத்துக் காட்டியருளின படியாலே அவற்றுக்கும் ஸத்தையுண்டாயிற்று; ஒரு மதிப்பும் விளைந்தது. இல்லையேல் அவற்றைக் கேட்பாரார்?

14. மாமுனிகள் அப்படி அவற்றை யெடுத்துக் காட்டுகிறபோது எங்ஙனே ஸ்ரீஸூக்தி விந்யாஸம் செய்தருளியிருக்கிறாரென்பதை மீண்டு மீண்டும் பன்னியுரைக்கின்றோம். உபதேச ரத்தின மாலையில் பெரிய வாச்சான் பிள்ளை பெரிய வாச்சான் பிள்ளை பெரிய வாச்சான் பிள்ளை யென்றே அருளிச்செய்தவர் பரந்த ரஹஸ்ய ப்ரஸ்தாவங்களில் நியமேந ஆச்சான் பிள்ளை யென்றே யருளிச் செய்து போந்தார். முதல் தடவையில் மாத்திரம் பெரிய வாச்சான் பிள்ளை யென்றருளிச்செய்து விட்டு அடுத்த இருபது தடவைகளிலும் ஆச்சான் பிள்ளை யென்றே அருளிச்செய்திருந்தாலும் நாம் வாய்திறக்க வழியில்லை யாகுமே. ஆரம்பம் முதல் அவஸாநம் வரையில் ஆச்சான் பிள்ளை யாச்சான் பிள்ளை யாச்சான் பிள்ளை யென்றே ஸாதித்து வந்தது மல்லாமல் இடையில் ஓரிடத்தில் ஆச்சான் பிள்ளையின் ப்ரக்ரியைக்கு மாறாகப் பெரிய வாச்சான் பிள்ளை ஸாதித்திருப்பதாகவும் ஸ்பஷ்டமாகக் காட்டியருளினபடியாலே ஆச்சான் பிள்ளை வேறு, பெரிய வாச்சான் பிள்ளை வேறு என்னுமிடத்தை அவரே மூதலித்துக் கொடுத்தாராயிற்று.

15. இதற்கும் மேலாக, நடுவில் திருவீதிப் பிள்ளைக்குப் பிறகும் பிள்ளை லோகாசார்யர்க்குப் பிறகும் ஆச்சான் பிள்ளையினுடைய ஸ்ரீஸூக்திகளை மேற்கோளாகக் காட்டியிருக்கின்றார் மாமுனிகள்—என்னும் விஷயத்தைப் பரவாத ப்ரதிக்ஷேப பூர்வகமாகவும் நிலை நாட்டி நிரூபித்திருக்கிறோமாதலால் தத்வஜிஜ்ஞாஸுக்களின் பரம த்ருப்திக்கு இவ்வளவே போதும்.

16. இந்தவியாஸத்தின் நிகமனம்;—ஸகலக்ரந்தங்களிலும் பெரும்பாலும் பட்டரென்றே வழங்கப்பட்டு வருமாசிரியர் சிலவிடங்களில் பெரியபட்டரென்று எழுதப்படுவதுபோலவும், பெரியஜீயரென்றே பெரும்பாலும் வழங்கப்பட்டு வருமாசிரியர் ஜீயரென்றும் வழங்கப்பட்டுவருவது போலவும் திருமலைநம்பி பெரியதிருமலைநம்பி யென்னுமிவ்விஷயம் கொள்ளத்தக்கது. இவ்வாராய்ச்சியில் பெரியாழ்வார்விசார ப்ரவேசத்திற்கு ப்ரஸக்திலேசமும் கிடையாது. பெரியபட்டரையே பட்டரென்பதுஎன்றிசைவதுபோலப் பெரியவாச்சான் பிள்ளையையே ஆச்சான் பிளளையென்பது என்றிசையக் கூடாதோவென்னில், இப்படி கனவிலும் நினைக்கமுடியாதபடியன்றோ மாமுனிகளின் திவ்யஸூக்தி செய்துவைத்திருக்கின்றது. அது இந்தவியாஸத்தின் 4-லக்கமிட்ட பகுதியில் விசதம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

இந்த வியாசத்தில் 11 முதலிய பாராக்கள் அரியபெரிய விஷயங்கள் கொண்டவை யென்பதை வித்யாபரிச்ரமமுடைய விவேகிகள் நன்கு ஆராய்ந்து அறிவர்கள்.

# பெரியாழ்வாருடைய அற்புதமான மொழி.

பெரியாழ்வார் ஸம்ஸாரிகளுக்கு ஸம்ஸாரத்தில் நிர்வேதத்தையும் ஜிஹாஸையையும் பிறப்பிக்க வேண்டி "ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகி" என்றொரு பதிகமருளிச் செய்துள்ளார்; அதில் எட்டாவது பாசுரம் * கூடிக்கூடியுற்றார்களிருந்து * என்பது. இதில் "குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து பாடிப்பாடியோர் பாடையிலிட்டு" என்றது எங்கும் யாவர்க்கும் அநுபவஸித்தமானதொரு விஷயம். "குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து" என்றவிதனை ஒவ்வொருவரும் நெஞ்சில் அடுத்தடுத்து மனனம் பண்ணவேண்டும். அவரவர்கள் ஜீவித்திருக்கும் நாளிலே அறிந்துமறியாமலும் பலபல குற்றங்களைச் செய்திருப்பார்கள், அவற்றையெல்லாம் உற்றாருறவினர் அறிந்துமிருப்பார்கள். ஒருநாளிலே முடியவேண்டியதுதானே. அப்படிமுடிந்தவாறே அந்தவுற்றாருமுறவினரும் அப்போது என்ன செய்வார்களென்னில், முன்பு தாங்களறிந்து வருந்திப்பேசியிருந்த அவரது குற்றங்களையெல்லாம் அடியோடு மறந்திட்டு அவரிடத்து இல்லாதகுணங்களை அபரிமிதமாக ஏறிட்டுப்புகழ்ந்தும், ஏதேனும் ஸ்வல்ப குணமுண்டானால் அதனை ஒன்று பத்தாக்கிப் பெருக்கிப் புகழ்ந்தும் பேசத்தொடங்குவர்களாம்; குற்றங்களையே நற்றமாகமாற்றிப் புகழ்ந்து பேசவும் புகுவர்களாம். உண்மையில் இதனை ஒவ்வோரிடத்திலும் அனுபவத்தில் அவ்யபிசரிதமாகக் காண்கிறோமன்றோ. இதுநிற்க.

இந்த ஸ்ரீஸூக்தியிலிருந்து எதிர்முறையில் ஒரு அர்த்தவிசேஷமும் அறியக்கிடக்கின்றது. முடிந்தபிறகு குற்றம்நிற்க நற்றங்கள் பறைவதுபோல, முடிகிறவரையிலும் ஜீவிதகாலத்தில் அவரவர்களின் நற்றம் நிற்கக் குற்றங்கள் பறைவதே ப்ராக்ருதர்களின் பணி—என்னுமர்த்தம் காட்டப்படுகின்றது. உலகமெல்லாங் கூடிப் புகழவேண்டுங்குணம் ஒருவரிடத்தில் கடல்போன்றிருந்தாலும் அவர் ஜீவித்திருக்கிறவரையில் அதைக்கேட்டுப் பொறுத்திருக்கமுடியாமல் கண்டவா பிதற்றிக் கருமங் கழிப்பார்கள். இவ்வாபத்திலிருந்து எம்பெருமானும் தப்பமுடியாதென்கிறார் வேதாந்ததேசிகர் ஸங்கல்ப ஸூர்யோதயத்திலே. "கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடி நின்று" என்பது ஸ்ரீவசன பூஷண திவ்யஸூக்தி. இவ்விருள்தருமாஞாலத்தில் குணக்ராஹிகளாய்ப் புகழுமவர்களைப்பற்றி ஆச்சரியப்படவேண்டுமேயொழிய தோஷங்களைக் கூறி தூஷிக்குமவர்களைப் பற்றிச் சிறிதும் ஆச்சரியப்படவோ வருந்தவோ அவச்யமில்லையென்பது தேறிற்று.

ஒரு வித்வான் வெகு அற்புதமானதொரு நூலியற்றினார் அதைக் காகிதத்தில் எழுதாமல் ப்ராசீனவழக்கப்படி ஓலையேட்டில் எழுதிவைத்துக்கொண்டிருந்தார். சிலவித்வான்கள் கூடியிருந்தவிடத்தில் அதையவிழ்த்து வாசிக்கத் தொடங்கினாரொருநாள். ஓலைச்சுவடியாயிருந்தபடியாலே 'என்றைக்கோ மாண்டுபோனதொருவித்வான் இயற்றிய நூலாயிருக்குமிது' என்று நினைத்த அவ்வித்வான்கள் கேட்டுக்கேட்டுப் பரமானந்தம் பொங்கிப் புகழ்ந்துகொண்டே வந்தார்கள். முடிவில் அந்த க்ரந்தகர்த்தாவின் பெயரைப்பொறித்துள்ள ச்லோகமிருந்தது; அதையும் அவர்வாசித்தபோது இந்த க்ரந்தம் இவரேயியற்றியதென்பதை யறியப்பெற்றார்கள் ச்ரோதாக்களான அந்தவித்வான்கள். அறிந்தவுடனே, நம்கண்ணெதிரேகாண்கிற இவருடைய நூலையா நாம் புகழ்ந்து விட்டோம்! என்று மிக்க அனுதாபங்கொண்டு, ஒருவாறு தேறி 'முதலிலிருந்து மறுபடியும் வாசிக்க' என்று கோரினார்கள் ஆனந்தாதிசயத்தினால் இன்னமுங் கொண்டாட விரும்பி மறுபடியும் வாசிக்கச் சொன்னார்களென்று கருதிய அந்த வித்வான்கள் யாவரும் சப்ததோஷம் அர்த்ததோஷம் அலங்காரதோஷம் என்று பதந்தோறும் பலதோஷங்களையெடுத்துக் கூறி ஆக்ஷேபிக்கப் புகுந்தார்கள். அவரும் மருமமறிந்துகொண்டு அஞ்சலிசெய்து விட்டு எழுந்து சென்றார். இதையெல்லாம் நன்கறிந்த பெரியாழ்வார் "குற்றம் நிற்க நற்றங்கள்பறைந்து" என்று அற்புதமாக வருளிச் செய்தார்.

---

# மடாதிபதிகளும்–அமடாதிபதிகளும்.

விரக்தியின் மிகுதியினால் துறவறம்பூண்ட யதிகள் ஸகல ஸங்கங்களையும்விட்டு க்ராமைகராத்ரமாய் ஸஞ்சரித்து பிக்ஷாசர்யையினால் தேஹதாரணம் பண்ணி வர்த்திக்கவேண்டியது சாஸ்த்ரஸம்மதமாயிருக்க, மடாதிபதிகளென்று பெயர்வஹித்து, யதிகளாவதற்கு முன்பிருந்த பற்றைக்காட்டிலும் மிகவுமதிகமான பற்றை யேறிட்டுக்கொண்டு வர்த்திப்பது யுக்தமாகுமோவென்று பலர் சங்கிப்பதற்கு ஸமாதானமாகும்படி பெரியார்களிடம் கேட்ட சில விஷயங்கள் இங்கு விஜ்ஞாபிக்கப்படுகின்றன. ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்களாய் அதிலும் தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களான ஜீயர்களைப்பற்றியே இங்கு எழுதலாகிறது.

“மாடபத்யம் யதி: குர்யாத் விஷ்ணுபூஜாபிவ்ருத்தயே” என்கிற பகவச்சாஸத்ர வசனமொன்று பெரியார்களால் கையாளப்பட்டிருக்கின்றது. யதிகளானவர்கள் பகவானுடைய பூஜையின் அபிவிருத்தியின்பொருட்டு மடாதிபதித்வத்தை வஹிக்கலாமென்பது மேலே குறித்த பகவச்சாஸ்த்ர வசனத்தின் பொருள். இந்த வசனத்தை யவலம்பித்தே ஸ்வாமி யெம்பெருமானார்போன்ற பூருவர்கள் அனேக திவ்ய தேசங்களில் கைங்கர்ய ஸம்ருத்திக்காகவே உத்தமாச்ரமிகளை மடாதிபதிகளாக்கி வைத்திருக்கிறார்கள். ஸ்ரீரங்கத்தில் ஜீயர், திருமலை திருப்பதியில் ஜீயர், வானமாமலையில் ஜீயர், ஆழ்வார் திருநகரியில் ஜீயர், திருமாலிருஞ்சோலையில் ஜீயர் என்றிப்படிப்பட்ட ஜீயர்களெல்லாம் மடாதிபதிகளாக விளங்கிவருவது .அந்தந்த திவ்யதேசங்களில் எம்பெருமான்களுடைய கைங்கர்ய ஸாம்ராஜ்ய நிர்வாஹத்திற்காகவே யென்பது ப்ரத்யக்ஷ லக்ஷ்யம். ஸன்னிதிகளில் விசேஷ மரியாதைகளும் ஸந்நிதிகார்ய நிர்வாஹங்களில் செங்கோல் செலுத்துமதிகாரமும் நியாயாலயங்களிலும் அவிசால்யமாக அனுமதிக்கப்பட்டு இற்றைக்கும் இருந்துவருவதைக் காணுகின்றோம். ஆகவே இவர்களின் மடாதிபதித்வம் சாஸ்த்ர ஸித்தமாய் எம்பெருமானார் போல்வாரான பூர்வாசார்யர்களின் ஆஜ்ஞாஸித்தமுமாய் அவிகீதமானது.

எந்த திவ்யதேசங்களில் ஸன்னிதிக்கும் ஜீயர்க்கும் ஒருவிதமான ஸம்பந்தமும் காணமுடியாமலிருக்கின்றதோ, ‘என்றைக்கோ இருந்தது என்றைக்கோ போய்விட்டது’ என்று சொல்லும்படியாக விருக்கின்றதோ, அவ்விடங்களில் ஜீயர்கள் மடத்தில் வாஸம்பண்ணினாலும் மடாதிபதிகளென்று பெயர்பெறுதற்கு சாஸ்த்ரரீதியிலும் அர்ஹதையற்றவர்கள் ஸங்கேதரீதியிலும் அர்ஹதையற்றவர்கள். இவர்கள் மடாதிபதிகளல்லாதார் என்கிற காரணத்தினால் அமடாதிபதிகளென்று வழங்கப்பட்டு வருகிறார்கள். ஸந்நிதியில் மரியாதையோ அதிகாரமோ ஒன்றுமில்லாமற் போனாலும் திவ்யப்ரபந்தாதிகாரிகளாகவாவது இருந்தால் “மாடபத்யம் யதி: குர்யாத் விஷ்ணுபூஜா பிவ்ருத்தயே” என்கிற ப்ரமாண வசனத்தை கோஷ்டீ நிர்வாஹ பரமாக்கிக்கொண்டு யதிகளாகி மடவாஸிகளாகலாம். திவ்ய ப்ரபந்தாதிகாரமு மில்லாமல் அப்படிப்பட்டவர்களாக விரும்புவது சாஸ்த்ர ஸம்ப்ரதாய ஸம்மதமாகத் தெரியவில்லை. அன்னவர்கள் யதிதர்மவிதானங்களில் நியமித்திருக்கிறபடி நதீ தீரங்களிலும் க்ராமங்களிலும் ஏகாந்தவாஸம் செய்து வைராக்யத்தை வளர்த்துக்கொண்டு வாழ்வது நலம்.

வேதாந்த தேசிகருடைய ஸங்கல்பஸூர்யோதயத்திலுள்ள “பிக்ஷுதி சிஷ்யஜந ரக்ஷண தக்ஷிணேதி சாடீதி சாச்வதமடோபதி கல்பநேதி, க்ரந்தோப ஸங்க்ரஹணமூல்யமிதி ப்ருவாணா: ஸந்ந்யாஸிநோபி யததே மஹதீம் தநாயாம்” என்கிற ச்லோகப்பழிப்புக்கு இலக்காகாதபடி வர்த்திக்க வேண்டுவது உண்மையானயதிகளின் கடமையாகும்.

---

ஸ்ரீ:

## டில்லியில் ஸ்ரீ அண்ணங்கராசாரியார்ஸ்வாமியின்
## அரிய உபந்யாஸங்கள்.
## மாபெரும் விஜ்ஞானி டாக்டர். ஸர். கே. எஸ். கிருஷ்ணன்
## பாராட்டு.

ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்ஸ்வாமி போனவருடம் நவம்பரில் டில்லிக்கு விஜயம்செய்து, ஸ்ரீவைஷ்ணவ சபையின் சார்பில் நிகழ்த்திய அரியஉபந்யாஸங்களைப்பற்றி “ஸ்ரீராமானுஜன்” பத்திரிகையில் எழுதும்போது “மறுபடியும் டில்லி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வாமியைத் தண்டம் சமர்ப்பிக்கும் தருணம் எப்போது வாய்க்கும்?” என்று இங்குள்ளாரின் பிரார்த்தனையை எவ்வளவு சீக்கிரம் நிறைவேற்றிவிட்டான் எம்பெருமான்! அவன் கருணைக்கடல் என்பது பொய்யாகுமா?

ஸ்ரீ ஸ்வாமி வதரிகாச்ரமக்ஷேத்திர யாத்திரையாக பந்துஜன சிஷ்யவர்க்கங்கள் பின் தொடர காஞ்சியிலிருந்து மே மாதமத்தியில் புறப்பட்டு ஆங்காங்கு பல வடநாட்டுத் திருப்பதிகளைச் சேவித்துக்கொண்டு, அங்குள்ள ஆஸ்திகர்களின் வேண்டுகோளுக்கிணங்க பல அரிய சொற்பொழிவுகளையாற்றிக்கொண்டு சுமார் 1½ மாதத்திற்குப்பிறகு டில்லிக்கெழுந்தருளினார். டில்லி ஸ்ரீவைஷ்ணவ சபையார், ஸ்வாமியின் விஜயத்தைப் பயன்படுத்திக் கொள்ள ஜூன் 29, 30, ஜூலை 1 இத்தேதிகளில் பிரசங்கங்களுக்கு ஏற்பாடு செய்தனர். “தென்னிந்தியா க்ளப்” மண்டபத்தில் உபந்யாஸங்கள் வெகு விமரிசையாக நடந்தேறின.

வேதங்கள் கோஷிக்க, ஸ்வாமி பூர்ணகும்பத்துடன் எதிர் கொண்டழைத்துச் செல்லப்பட்டார். ஸதஸ்ஸில் டில்லி பல பாகங்களிலிருந்தும் வந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் மாத்திரமன்றி சங்கர, மத்வ கொள்கைகளைப் பின்பற்றுபவரும், ஆண்களும் பெண்டிருமாய்க் குழுமியிருந்தனர். அவர்களில் நம் நாட்டு மாபெரும் விஞ்ஞானி டாக்டர் ஸர் கே. எஸ். கிருஷ்ணன், ஸ்ரீ P. N. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (Deputy Secretary, Ministry of External Affairs) கவர்மெண்ட் "Commercial Publications" ஆசிரியர் ஸ்ரீ S. R. S. ராகவன், தமிழ்ச்சங்கத்தின் உதவித்தலைவி ஸ்ரீமதி ராகவன், Income-tax Tribunal மெம்பர் ஸ்ரீனிவாஸாசாரியர், F. P. S. C. ஆபீஸ் ஸ்ரீ V. G. R. அய்யங்கார் இப்படிப்பலபேரைக் குறிப்பிடலாம். ஸ்வாமிக்கு மாலைமரியாதை செய்யப்பட்டபின் டாக்டர் ஸர் கிருஷ்ணன், ஸ்வாமியிடம் தனக்குள்ள ப்ரதிபத்தியின் மிகுதியால் ஆனந்தபாஷ்பம் பெருக ஸ்வாமிக்குப் பின்வருமாறு ஸ்வாகதம் கூறினார் :—

"இம்மாதிரியான வித்வத் ஸதஸ்ஸுக்களில் எழுந்து பேசுவதற்கு அடியேனுக்கு அர்ஹதை யில்லை. 'ஸா வித்யா யா விமுக்தயே, வித்யாந்யா சில்பநைபுணம்' என்றபடி அடியேன் கற்றதெல்லாம் செருப்புக்குத்தக் கற்றவோபாதி; வகுத்த விஷயத்தில் ஏகதேசமும் பொழுதுபோக்கப் பெற்றவனல்ல. இந்த சபையின் காரியதரிசிகளின் நியமனத்தை மேற்கொண்டு ஏதோ பேச எழுந்திருந்தேன். தமிழ் ஸம்ஸ்க்ருத பாஷைகள் ஏகதேசம் கற்றவர்கள், அல்லது ஸம்ப்ரதாய க்ரந்தங்களில் ஏதேனும் பற்றுள்ளவர்கள், இவர்களுள் நம் ஸ்வாமியைத் தெரியாதவர்கள் கிடையாது. ஸ்வாமியினுடைய பாண்டித்யத்தையும், அவருடைய தனிப்பட்ட நாவீறையும் கொண்டாடாதாரில்லை. இதரகோஷ்டிகளிலும் ப்ரக்யாதிபெற்ற மஹான் நம்ஸ்வாமி.

அடியேனுக்கு வெகுநாளைய ஸம்சயமொன்றுண்டு எம்பெருமானுடைய அதிமானுஷசேஷ்டிதங்களைக்கேட்டு ஆச்சரியப்படுவதுபோல, நம்பூர்வாசார்யர்களுடைய நினைத்தற்கரிய அபாரமான பாண்டித்யத்தையும் நினைத்து அடியேன் ஆசசரியப்படுவதுடன், இது ஸத்யமாகுமா என்ற ஸந்தேஹமும் அடியேனுக்கு நெடுநாளாக இருந்துவந்தது. நம்ஸ்வாமியின் அபரிமிதமான ஸர்வதோமுகபாண்டித்யத்தைக் கண்டபின்புதான் என் நெடுநாளைய ஸம்சயம் தீரப்பெற்றேன்.

பதரிகாச்ரமயாத்ரை எழுந்தருளும் போது டில்லிக்கும் எழுந்தருளி இரண்டு மூன்று நாள் தங்கி உபந்யாஸங்கள் நடத்த வேண்டுமென்ற நம்முடைய பிரார்த்தனைக்கு இணங்கி ஸ்வாமி பண்ணின க்ருபைக்குத் தலையல்லால் கைம்மாறில்லை.

அடியேனுக்கு ஸ்வாமியை நேரில் ஸேவிக்க வேண்டுமென்ற அவா நெடுநாளாக உண்டு. இதுவரை அந்த பாக்கியம் அடியேனுக்குக் கிடைக்கவில்லை. இன்று தான் கிடைத்தது. பதரியாத்ரையாக எழுந்தருளியுள்ள ஸ்வாமியின் ஸேவையும் அவருடன் கூட எழுந்தருளியிருப்பவர்களின் ஸேவையும், சுமார் தொள்ளாயிரம் வருஷங்களுக்கு முன் கூரத்தாழ்வான் முதலானோருடன் போதாயன வ்ருத்தி ஸ்ரீகோசம் தேடுவதற்காக ஸ்ரீபாஷ்யகாரர் செய்தருளின ஸ்ரீகாச்மீர சாரதா பீடயாத்திரையை அடியேனுக்கு ஞாபக மூட்டுகிறது. ஸ்வாமியும் எம்பெருமானார் போலவே நூற்றிருபது பிராயம் எழுந்தருளியிருந்து பகவத் விஷய, ஸ்ரீபாஷ்ய, ரஹஸ்ய ப்ரவசனங்கள் செய்ய நமக்கெல்லாம் உபகரிக்கவேணுமென்பது அடியேனுடைய ப்ரார்த்தனை. இந்த சபையோரெல்லோருடைய ப்ரார்த்தனையும்." என்று முகவுரை கூறி முடித்தார் க்ருஷ்ணன் ஸ்வாமி.

ஸ்வாமி மூன்று நாட்களும் எடுத்துக் கொண்ட விஷயங்கள் முறையே "ஸ்ரீபாஷ்யத்தின் பெருமை" "ஸ்ரீவைணவம்" "பக்தியும் அதன் அங்கங்களும்" என்பவை.

இம்மூன்று விஷயங்களைப்பற்றியும் மூன்றுநாட்களிலும் ஸ்வாமி விரிவாக அருளிச் செய்த விஷயங்கள் தனிப்புத்தகமாக வெளியிடப்படவேணு மென்றும் அதனால் உலகமெல்லாம் பயன்பெற வேணுமென்றும் இங்குப் பெரியார்கள்யாவரும் ஏகமனதாகச் சொல்லிக்கொண்டார்கள். உபந்யாஸம் செய்த விஷயங்களைப் புத்தகத்தில் வாசிப்பதைவிட நேரில்கேட்டு ரஸிக்கும் பாக்கியம் ஒப்பற்றதென்பதைநாம் சொல்லவேண்டுமோ? கேள்வியினாலுண்டாகுமுணர்ச்சி படிப்பினாலுண்டாகமாட்டாதென்றே பலமஹான்களின் கைகண்ட அனுபவம்.

ஸ்ரீபாஷ்யத்தின் பெருமைபற்றி முதல்நாள் அருளிய உபந்யாஸத்தில் உபநிஷத்துக்களின் ஸ்வாரஸ்யமும் ப்ரஹ்மஸூத்ரத்தின் ஸ்வாரஸ்யமும் எம் ஸ்ரீபாஷ்யகாரருடைய விவரணங்களில்தான் நன்கு பொலிகின்றதென்பதை ஸ்வாமி மிக விரிவாக எடுத்து நிரூபணம் செய்ததை நம்மவர்கள் மாத்திரமேயல்லாமல் இதரமதஸ்தர்களுங்கூட மிகவும் பாராட்டினார்கள். இரண்டாநாள் ஸ்ரீவைஷ்ணவம் என்பது பற்றிப்பேசுகையில், ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயத்தின் தத்துவம் முழுவதும் ஆழ்வாராசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளிலிருந்தும் பகவத் கீதாதிகளிலிருந்தும் பேரின்ப வெள்ளமாகப் பேசப்பட்டது.

மூன்றாநாளில், பக்தியின் தன்மை, பக்தியின் அங்கங்கள், பக்தியின் சாதனங்கள் இவை ஸ்ரீபாஷ்யத்திலிருந்தும் பகவத்விஷயத்திலிருந்தும் ரஹஸ்யங்களிலிருந்தும் வெகுவிரிவாகவும் "மரங்களுமிரங்கும்வகை" என்னும்படியாகவும் பேசப்பட்டன.

கடைசி நாள் உபந்யாஸ முடிவில் ஸ்வாமி ஸாதித்ததாவது—

"நான் போன நவம்பரில் இங்கு வந்திருந்த போது உங்கள் கிருபைக்குப் பாத்திரமானேன். அப்போது ஐந்து நாட்கள் ஸ்ரீ ஸர். எஸ். வரதாசாரியார், Major C. V. ராஜன் போன்ற பெரியோர்களின் ஆதரணையை இனிது பெற்று ஆனந்தித்தேன். இப்போது இவர்கள் டில்லியில் இராத குறையை நீக்க டாக்டர்-ஸர். கிருஷ்ணன், ஸ்ரீ S. R. S. ராகவன் முதலிய பெரியோர்கள் இங்கு பிரஸன்னமாயிருக்கின்றனர். கடந்த மூன்று நாட்களும் டில்லி வைஷ்ணவ மஹான்களின் முன்னிலையில் எனக்குத் தெரிந்தவைகளை எடுத்துச்சொன்னேன். ஓவியக் கலாநிதி ரவிவர்மா தான் எழுதிய படமெல்லாவற்றையும் பகவானைப்பற்றியே செய்தான். அதுபோல இங்கு மூன்று நாட்களும் பேச எடுத்துக்கொண்டவைகள் பகவத் விஷயமே. இதுவே யாவருக்கும் திருப்தி அளித்திருக்கும். நான் சொன்னவை யெல்லாம் சரியோ, தப்போ, நீங்கள் ரஸித்தீர்களோ இல்லையோ, குற்றங்களை வாத்ஸல்ய குணத்தால் போக்யமாகவே எடுத்துக்கொள்வீர் என்பதே எனது நம்பிக்கை" (கரகோஷம்).

பிறகு, சபை உபதலைவர் ஸ்ரீ C. S. பார்த்தசாரதி அய்யங்கார், B. A. B. L. டில்லி ஸ்ரீவைஷ்ணவர்கள் சார்பாக யதாசக்தி ஸம்பாவனையைச் சமர்ப்பித்து தங்கள் க்ருதஜ்ஞதையை வருமாறு தெரிவித்தார் :—

"இம் மூன்று நாட்களும் ஸ்வாமியின் கர்ணாம்ருதமான உபந்யாஸங்களைக் கேட்டு ஆனந்தித்தோம். ஸ்வாமியைப்பற்றியோ, அவருடைய பிரசங்கத்தைப் பற்றியோ எப்படி புகழ்வதென்று தெரியவில்லை. ஸ்வாமியின் பாண்டித்யம் அளவிறந்தது. ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்கள், ஆழ்வாராசாரியர் ஸ்ரீஸூக்திகள் உபயவேதாந்த க்ரந்தங்களனைத்தையும் புத்தகமின்றியே, கடல் மடைதிறந்தாற்போல எடுத்துரைக்கும் திறமைவாய்ந்தவர். மூன்று நாட்களும் ஸாதித்த விஷயங்களுக்கு குறிப்புகளொன்றும் வைத்துக்கொள்ளவில்லை. ஸ்ரீ கோசங்களைத்தான் இந்தமாதிரி யாத்திரைகளில் கொண்டுவர முடியுமா? ஸ்வாமியின் ஞாபகசக்தி ஒப்புயர்வற்றதே! ஒருவருக்கு பாண்டித்யமும் ஞாபக சக்தியும் ஒருங்கேயிருக்கலாம்; ஆனால் சொல்லும் திறமையின்றி இவை ப்ரயோஜனம் ஆகமாட்டா. ஸ்வாமிக்கோ, உபந்யஸிப்பது அனாயாஸகார்யம். கம்பீரத்வனியும், ஸ்பஷ்டமான உச்சரிப்பும், அம்ருதப்ரவாஹம் போன்ற வாசகதோரணையும் கேட்பவருக்கு சுச்ரூஷையை மேன்மேலும் உண்டாக்குகிறது இச்சக்தி விசேஷங்களுக்கு அடிப்படையான காரணம் அவருடைய நியதமான தினசரியே. ஓய்வு ஒழிவில்லாமல் கண்மலரும்போது ஆரம்பித்து கண்வளரும் வரையில் ஸித்தாந்த பிரசாரத்திற்காகவே ஒவ்வொரு நிமிஷமும் அர்ப்பணம் செய்துவருகிறார். நம் பூர்வாசாரியரின் தினசர்யைகளில் காணப்படும் ச்லோகங்களுக்கு இவரே பூர்ணமான நிதர்சனமாவர், ஸ்வாமியின் ஆக்ருதிக்கே நாம் மங்களாசாஸனம் செய்யத் தகும்.

இம்மாதிரி தன் ச்ரமம், ஆயாஸம் ஒன்றையும் பாராட்டாமல் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்திலுள்ள ஆர்வத்தால் ஆங்காங்கு எழுந்தருளுமிடங்களிலெல்லாம் ப்ரவசனம்செய்துகொண்டுவரும் நம்ஸ்வாமிக்கு எம்பெருமான் தீர்க்காயுஸ்ஸும், திடகாத்ரமும் அருளும்படி பிரார்த்திப்போம். ஆஸேது ஹிமாசலம் ஸ்வாமி நம்தரிசனத்தைப் பரவச்செய்வாராக."

பிறகு, சபை காரியதரிசி ஸ்ரீ கு. அனந்தாசாரியார் ஸம்ஸ்கிருதத்தில் ஒரு பிரிவு உபசாரப் பத்திரம் வாசிக்க, கூட்டம் இனிது கலைந்தது.

"என்ன அற்புதமான உபந்யாசம்! பொன்னால் பொறிக்கத்தக்க அரிய உபதேசமொழிகள்தான் என்ன; பட்டர், பெரியவாச்சான்பிள்ளைபோன்ற ஆசார்ய பரம்பரையைச் சேர்ந்தவர் என்று சொல்லக் கூடியவரன்றோ இவர்! கருணைக்கடலான எம்பெருமானால் இவரை அருளப்பெற்றோமே, நமது பாக்கியமே பாக்கியம்; என்று பூரித்துக்கொண்டிருப்பவர் பலர்.

இப்படிக்கு.

**A. ராமாநுஜம் B. A. புதுடில்லி.**

ஸ்ரீ:.

# வடநாட்டுத் திருப்பதி யாத்திரை.

(ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர்.)

தென்னாட்டில் ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திருப்பதிகள் விசேஷமாகவும், வடநாட்டில் இதிஹாஸபுராண ப்ரஸித்தங்களான க்ஷேத்ரதீர்த்தங்கள் விசேஷமாகவும் விளங்குகின்றனவென்பது உலகறிந்தது. "வடதிசை மதுரை சாளக்கிராமம் வைகுந்தம் துவரை அயோத்தி, இடமுடைவதரி யிடவகையுடைய எம்புருஷோத்தமனிருக்கை......கண்டமென்னுங்கடிநகரே" (பெரியாழ்வார் திருமொழி 4—7—9.) என்கிற பாசுரத்தின்படியே ஆழ்வார்களின் மங்களாசாஸனம் பெற்ற திருப்பதிகள் வடநாட்டிலும் ஆங்காங்குச் சிலவுள்ளன வென்பதும் உலகறிந்தது. இப்படிப்பட்ட திவ்யக்ஷேத்ரதீர்த்தங்களில் சென்று சேவிக்க அடியேனுக்குக் குதூகலம் இயற்கையாகவேயுள்ளது. இதுவரையில் அடியேனுடைய வாழ்நாளில் பத்தெட்டு தடவைகளுக்கு மேல் வடநாட்டுத்தலங்களைச் சென்று சேவித்திருக்கின்றேன். ஆறுவருஷங்களுக்குக் கீழ் ஒருதடவை ஸ்ரீபதரிகாச்ரம யாத்திரையும் செய்திருக்கின்றேன். அப்போது க்ஷேத்ரதீர்த்த விசேஷங்களைப்பற்றி நான்குபாஷைகளிலும் ஒரு புத்தகமும் வெளியிட்டிருக்கின்றேன்.

இவ்வாழ்நாளில் மறுபடியும் ஒருவிசை ஸ்ரீபதரிகாச்ரமமுட்பட வடநாட்டுத் தலங்களையெல்லாம் தொழுதுவரவேணுமென்று ஆசை தோன்றியதனால் 13—5—49 தேதி முதலாக எண்பது நாட்கள் பரிஜனபரிவாரங்களுடன் யாத்திரைசெய்துவந்த பேரின்ப வெள்ளத்தை அன்பர்களும் பருகிக்களிக்குமாறு செய்யப்புகுகின்றேன். பின்னால் யாத்திரை செய்ய விரும்புவோர்க்கு இச்சிறுபுத்தகம் மிகவும் பயன்படுமென்பது அடியேனது துணிபு.

## பத்ராசலம்.

இந்த யாத்திரையில் முதன் முதலாக பத்ராசலமென்னும் க்ஷேத்திரம் சேவிக்க ப்ராப்தமாயிற்று. இத்தலம் கோதாவரிக்கரையில் வெகு அற்புதமாக அமைந்துளது. ஸ்ரீராம லக்ஷ்மண ஸீதா பிராட்டிகளின் திருக்கோலம் இத்தலத்தில் ஆச்சரியமாகக் காட்சி தருமழகு வியக்கத்தக்கது. அசலம் என்று மலைக்குப் பெயராதலால் இதுவொரு பெரிய மலையாக இருக்குமோ வென்று சங்கிக்கவேண்டா. ஹஸ்திகிரி, ச்வேதாத்ரி என்று தென்னாட்டிலுள்ள ஸ்தலங்கள்போல, மிகச்சில படிகளே யுள்ள சிறு குன்றின் மீது மிகவழகிய ஆலய முள்ளது. திருவாராதனைகள் நடக்குமழகும் தினப்படியாக நித்யோத்ஸவம் நடைபெறும் பரிசும் பக்தர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றது. ராமதாஸ் என்னும் பக்த சிகாமணியின் கதையைக் கேட்டவர்கள் இத்தலத்தின் பெருமையில் நன்கு ஈடுபட்டிருப்பார்கள். அப்பரம பக்தர் லக்ஷக்கணக்கான பொருட்செலவு செய்து இத்தலத்தில் இயற்றியிருக்கும் கைங்கரியம் பலவகைப்பட்டுள்ளது. திருவாபரணங்களின் காட்சி யொன்றே நெஞ்சைப் பரவசமாக்குகின்றது.

இவ்வூரில் கிணறுகள் மிகச் சிலவே; இல்லையென்றே சொல்லலாம். கோதாவரியின் கரையிலேயே யுள்ளதனால் பெரும்பாலும் அந்த நதியின் தீர்த்தமே எல்லா வுபயோகங்களுக்குமாகின்றது. இங்குப் பல தர்ம சாலைகளுண்டு. ஸ்ரீவைஷ்ணவ குல திலகரான அமராவதி சின்ன சேஷாசாரிய ரென்பவர் ஸன்னிதியில் திருவாராதன ஆதீனமுள்ளவர் அதிதி ஸத்காரத்தில் மிகுந்த ஊக்கத்தோடு விளங்குகின்றார். ஸ்ரீவைஷ்ணவ அப்யாகதர்களுக்குச் சிறந்த புகலிடம். இங்கு இப்பெரியார் (16-5-49 மாலை) ஸன்னிதியில் காலக்ஷேப ஸபையொன்று ஏற்படுத்திப் பல ச்ரோதாக்களைச் சேர்த்து "ஸ்ரீராமபிரானுடைய திருக்குணங்கள்" என்னும் விஷயமாக அடியேனைக்கொண்டு தெலுங்கு பாஷையில் ஒரு ப்ரவசனம் செய்வித்து ஸ்ரீராமபிரானுடைய பேருளைப் பெறுவித்தார்.

இத்தலத்திற்கு வந்து சேரும் வழி ;—சென்னையிலிருந்து பெஜவாடா வென்கிற விஜயவாடாவுக்கு வந்து [விருப்ப முண்டானால் அங்கு க்ருஷ்ணா நதியில் ஸ்நானம் செய்து] அங்கிருந்து ஹைதராபாத் போகும் வழியில் (N. S. Ry.) டோர்னகல் ஜங்ஷனிலிறங்கி வண்டிமாறி பத்ராசலம் ரோட் என்கிற ஸ்டேஷனில் இறங்கி அங்கிருந்து 18—மைல் தூரம் மோட்டர் பஸ்ஸில் சென்றால் கோதாவரிக் கரையை யடையலாம் அங்கிறங்கி நதியில் நடந்து செல்லவேண்டும். தீர்த்தமுள்ள காலங்களில் படகு விடுவார்கள். சென்னையிலிருந்து எட்டு பத்து ரூபாய்ச் செலவில் இத்தலமடையலாம்.

இவ்விடம் வந்து சேருவதற்கு முன் நெல்லூரில் இறங்கி வட பண்ணையாற்றின் கரையில் ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்கவும், பெஜவாடா ஸமீபத்தில் மங்களகிரி சென்று பான கந்ருஸிம்ஹனை ஸேவிக்கவும் பெறலாம்.

## யாதகிரி க்ஷேத்திரம்.

பத்ராசலத்திலிருந்து யாதகிரி க்ஷேத்திரம் ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. இத்தலம் தென்னாட்டினர் பெரும்பாலர்க்குத் தெரியாது. 500, 600, படிகளுள்ள சிறு குன்றின் மீது மிக விசாலமாயும் பரம ஸௌந்தரமாயுமுள்ள நரஸிம்ஹ க்ஷேத்திரம் இது. மலையில் முழஞ்சில் ஒரு பகுதியாகவே நரஸிம்ஹ பகவான் எழுந்தருளி யுள்ளார். திருவேங்கடமுடையான் ஸன்னிதியிற்போலே இங்கும் வரப்ரஸாத ப்ரஸித்தி மிக விசேஷமாக வுள்ளது. நாடோறும் அபரிமித பக்த வர்க்கங்களினால் பிரார்த்தனைகள் செலுத்தப்படுகின்றன. கருடோத்ஸவமில்லாத நாளே கிடையாது. ஸன்னிதியின் அமைப்பு அழகே வடிவெடுத்ததாயும் மிகப்புனிதமாயுமுள்ளது. பக்தர்களின் கைங்கரியங்கள் நாளடைவில் இங்கு விசேஷ அபிவிருத்தியடைந்து வருகின்றன. ஏறக்குறைய நூறு தருமசாலைகள் மாடமாளிகை போல் விளங்குகின்றன. தேவஸ்தானத்தின் சார்பாகவும் தர்மசாலைகள் அமைந்துள்ளன. மிக வானந்தம் பொலிய வசிக்கத்தக்க தலமிது.

பத்ராசலத்திலிருந்து டோர்னகல் ஸ்டேஷன் வந்து சேர்ந்து அங்கிருந்து ஹைதராபாத் போகும் வண்டித்தொடரில் ஏறி வங்கபல்லி அல்லது (அதற்கடுத்த) ராயகிரியென்னும் ஸ்டேஷனில் இறங்கி மாட்டுவண்டியில் மூன்றுகல் சென்றால் இத்தலமடையலாம். ஹைதராபாதிலிருந்து மோட்டர்கார்கள் நேராக இங்கு ஸன்னிதிவாசலுக்கே வந்து சேருகின்றன.

இத்தலத்திலும் தேவஸ்தான அதிகாரிகளின் வேண்டுகோளால் நரஸிம்ஹப்ரபாவ விஷயமாகத் தெலுங்கு பாஷையில் ஒருபந்யாஸம் செய்யநேர்ந்தது.

## (ஸிகந்தராபாத்—டக்கன்)

இங்கிருந்து பண்டாரபுரம் (பண்டரிபூர்) செல்ல நினைத்து, ஹைதராபாத் தாண்டிப் போகவேண்டியிருந்தபடியால் அங்குள்ள அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி ஸிகந்தராபாத் ஸ்ரீலக்ஷ்மீநாராயணன் ஸன்னிதியில் மூன்றுநான்கு நாள் தங்கியிருக்கநேர்ந்தது. ஸ்ரீமத் பரம ஹம்ஸேத்யாதி ஸ்ரீவானமாமலை ஸ்வாமியின் திருவடிஸம்பந்தியும் மஹாதனிக சக்ரவர்த்தியுமான (வைகுண்டவாஸி) லக்ஷ்மீநாராயண ஸேட்டின் பக்திச்ரத்தைகளின் சாச்வத ஜயஸ்தம்பம் போன்றதாய்' தென்னாட்டிலுள்ளஸன்னிதிகள் போன்றே கோபுரப்ராகார மண்டபாதி விபவங்களுடனும் நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவாதிவிசேஷங்களுடனும் ஆழ்வாராசார்ய திருநக்ஷத்ரபரிபாலன வைபவங்களுடனும் ஸ்ரீவானமாமலைஸ்வாமியின் திவ்யாஜ்ஞா பரிபாலக ஸ்ரீவைஷ்ணவ மணிகளின் கைங்கர்ய விசேஷங்களினால் பரிமளப்ரசுரமாய் விளங்குகின்ற இந்த ஸன்னிதி நாளடைவில் விசேஷ அபிவிருத்தியையடைந்து, யாத்ராக்ரமத்தில் இங்கு வரும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் ஆஸ்திக பக்தர்களுக்கும் மிகச்சிறந்த புகலிடமாயுள்ளது. இங்கு ஸ்ரீவானமாமலை ஸ்வாமி நியமனமடியாக ஸர்வாதிகாரி ஸ்தானத்தை யலங்கரித்தருளா நிற்பவரும் ஸத்ஸம்ப்ரதாய ஸாரவித்தமருமான ஸ்ரீ உ. வே. தெ. ஸ்ரீநிவா

ஸய்யங்கார் ஸ்வாமியின் அதிதிஸத்காரப்ராவண்யம் நாடுநகரமும் நன்கறிந்ததே. உள் குழைந்து பாராட்டத்தக்கது. "தனக்கெனவாழாப் பிறர்க்குரியாளர்" என்னும் பெருந் தகையாளர்களின் தலைவராய் விளங்கும் இந்தஸ்வாமியின் நியமனத்தினால் இங்கும் (தெலுங்குபாஷையில்) சிலவுபந்யாஸங்கள் செய்து ஸ்ரீலக்ஷ்மீ நாராயணனுடைய திருவரு ளுக்கு இலக்காக ப்ராப்தமாயிற்று. இவ்விடத்திற்குச்சமீபத்திலுள்ள (ஹைதராபாத்) கந்திகல் மேட்டு ஸ்ரீகோதண்டராமஸ்வாமி ஸன்னிதியிலும் பெருமாளைஸேவித்து இவ்விடம் விட்டுப் புறப்படலாயிற்று.

## பண்ட்ராபூர்—(ஷோலாபூர்.)

பாண்டுரங்கக்ஷேத்ர மென்பதே காலக்ரமத்தில் பண்டரிபூர்— பண்டராபுரம் என வழங்கப்பட்டுவருகின்றது. இங்கு **விட்டலநாத**னென்னும் எம்பெருமானுடைய ஸேவை மிகவினிது. ஸன்னிதியின் ஸந்நிவேசங்கள் மிகப்பெரியன. எம்பெருமானுடைய ஸௌசீல் யமோ அப்ரமேயமானது. பக்தர்கள் திருவடியிலே தலைமடுத்துஸேவிக்கும்படியான ஸௌலப் யம். (ஆனால் இப்படிப்பட்ட ஸௌலப்யம் சிலநாட்களாகத் தடை பெற்றிருப்பதாகத் தெரிகின்றது.) பக்தர்களின் பஜனைகளும் கீர்த்தனங்களும் இங்கு இடைவீடின்றி நடக்குமது பெரிய விசேஷம். ஸன்னிதிக்கு அரைமெயில் தூரத்தில் சந்த்ரபாகாநதி பெருகுகின்றது. அதன்கரையில் **ராமபாக்** என்னும் மிகப்பெரிய தோட்டத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விசாலமான வஸதி ஸௌகர்யமுள்ளது. ஆனால் வடதேசத்தில் பண்டாக்களென்கிற தீர்த்தபுரோஹிதர்கள் மிகப்பலராதலால் அவர்கள் தம் தம் க்ருஹங்களுக்கு நிர்ப்பந்தித் தழைத்துச் சென்று தங்கவைப்பர்கள். வைதிகவைஷ்ணவர்களுக்கு ராமபாக்வாஸமேஉற்றது.

ஹைதராபாதிலிருந்து **வாடி**யென்னும் ஸ்டேஷனுக்குவந்து சேர்ந்து, சென்னை— பாம்பே வண்டித்தொடரில் ஏறி, **குர்ட்வாடி** என்கிற ஜங்ஷனில் வண்டிமாறி இத்தலம் அடையவேண்டும். இதைக்காட்டிலும் குர்ட்வாடி ஸ்டேஷனுக்கு முந்தியே ஷோலாபூரில் இறங்கி அங்கு மங்களவாரபேட்டையில் ஸ்ரீலக்ஷ்மீநாராயணன் ஸன்னிதியைச் சார்ந்த தரும சாலையில் வெகு ஆனந்தமாகத் தங்கியிருந்து அங்கிருந்து மோடர்பஸ்வழியாகப் பண்டரி பூர் சென்று சேருவதே மிகவுத்தமமாகும்.

ஷோலாபூர் மிகச்சிறந்த ஸ்ரீவைஷ்ணவ பக்த மணிகள் வாழுமிடம். ப்ரபல வியாபார ஸ்தலம். மேற் சொன்ன லக்ஷ்மீ நாராயணன் ஸன்னிதியில் நாடோறும் காலை மாலைகளில் நடைபெறும் விசேஷங்கள் தென்னாட்டில் ஒரு தேவஸ்தானத்திலுமில்லை யென்று திண்ண மாகச் சொல்லலாம். உத்தராதி வைஷ்ணவர்களாயிருக்கச் செய்தேயும் திவ்யப்ரபந்தங் களில் இருநூறு பாசுரங்களுக்குமேல் அதிகரித்து, கண்டபாடமாக்கித் தமிழ் நாட்டு அத்யாபகர்களோடு வாசியற இயல் ஸேவிக்கு மழகும், பஞ்ச ஸூக்தங்களும் உபநிஷத்தும் ஓதி வேத பாராயணம் செய்யு மழகும், பூர்வாசார்ய ஸ்தோத்ரங்களையெல்லாம் முகஸ்த மாக்கி ஸேவிக்கிற வைகரியும் கண்டால் 'இதுதான் ச்வேதத்வீபமோ!' என்றே நினைக் கும்படியாக வுள்ளது. அடியேனறிய இருபது வருஷகாலமாக இங்கு இவ்வதிசய முள் ளது. இதைக் கண்ணாரக்கண்டும் காதாரக் கேட்டும் களிப்பதற்காகவும் யாத்ரிகள் இவ்வூ ரில் இரண்டு மூன்று நாட்களாவது தங்கியிருத்தல் மிக முக்கியமானது. இங்கெழுந்தரு ளும் தென்னாட்டு ஸ்ரீவைஷ்ணவர்களிடத்து இங்குள்ளார் காட்டும் உகப்பும் உபலாள னங்களும் வேறெங்கும் காணமுடியாதவை. இங்குப் பரம பக்தர்களின் கோரிக்கை யினால் நான்கு நாள் தங்கியிருந்து நித்யமும் ஹிந்தியிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் உபந் யாஸங்களைச் செய்து மகிழலாயிற்று.

இவ்விடம்விட்டுப் புறப்பட்டு அடுத்தபடியாக ஸேவிக்க நினைத்த க்ஷேத்ரம் **நாஸிக் பஞ்சவடி**. அங்குச் செல்லும்வழியில் **பூனா**, **பாம்பே** என்கிற இரண்டு மகாநகரங்கள் தடஸ் தப்படுகின்றன. இவற்றில் இறங்காமலும் தங்காமலும் **கல்யாண்** ஜங்ஷனிலிருந்தே

நாஸிக் போகலாமானாலும், க்ஷேத்ரதீர்த்த யாத்திரையோடு மஹாநகரக்காட்சியிலும் விருப்பமுடையார்க்கு இந்நகரங்களிலும் தங்கிப்போக ப்ராப்தமாகும்.

## (பூனா நகரம்.)

ஸோளாபூரிலிருந்து 6, 7 மணி காலத்தில் இங்குவந்து சேரலாம். இங்கு ரவிவார பேட்டையில் ஸ்ரீராமமந்திரம், லக்ஷ்மீநாராயணமந்திரம் என்னுமிரண்டு கோவில்கள் ஸேட்டுகளால் நவீனமாக ஏற்படுத்தப்பட்டவை. மிகவும் மனோஹரமாக விளங்குகின்றன. ஸ்ரீராமமந்திரமென்பது மிக விசாலமான தருமசாலையோடுங் கூடியது. தேவேந்திரபவனத்திற்போல் இங்கு வாஸஞ்செய்ய வெளிது. இந்நகரில் உத்யோகத்திற்காக நம் தமிழ்நாட்டு மக்கள் பல நூற்றுக்கணக்காக வந்து சேர்ந்திருக்கிறார்கள். அன்னவர்களின் கோரிக்கைக்காகவே நாம் இவ்விடம்வந்து இரண்டுநாள் தங்கியிருந்தோம். (1) ஸ்ரீராமாயண விசேஷார்த்தங்கள். (2) திவ்யப்ரபந்தப் பெருமை என்னும் விஷயங்கள் பற்றி இரண்டு நாள் இரண்டு உபந்யாஸங்கள் இங்குத் தமிழில் நடத்தப்பட்டன.

## (பம்பாய் மகாநகரம்.)

பூனாவிலிருந்து 4, 5 மணிகாலத்தில் அடையக்கூடிய நகரம் இது. இந்நகரின் சிறப்பைப்பற்றி இங்கு நாம் புதிதாக எழுதவேண்டிய தொன்றுமில்லை யன்றோ. அஸ்மதாசார்யரான ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கர ஜகத்குரு ஸ்ரீமதனந்தாசார்ய ஸ்வாமிகளால் இங்குப் பனஸவாடியில் ஏற்படுத்தப்பட்டுள்ள திருவேங்கடமுடையான் ஸந்நிதி தென்னாட்டுக் கோவில் முறையில் விலக்ஷணமாக நடைபெற்றுவருவதால் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இங்குத் தங்கியிருக்க வசதியுண்டு. இதற்கருகாமையில், நாராயணவாடி, தன்வந்தரிவாடி முதலான விடங்களிலும் வசதியுண்டு.

## நாஸிக் பஞ்சவடி.

பம்பாய் நகரத்திலிருந்து 5, 6 மணிகாலத்தில் சென்று சேரக்கூடியவிடம் இது. நாஸிக்ரோட் என்னும் ஸ்டேஷனில் இறங்கி 7 மைல்தூரம் மோட்டார்பஸ்ஸில் சென்றால் பஞ்சவடியடையலாம். இங்கு கோதாவரியின் அழகும் அதன்கரையில் பஞ்சவட தபோவனங்களின் அழகும் அநுபவித்தே ஆனந்திக்கவேண்டும். ஸ்ரீராமஸீதா விஹாரஸ்தலங்கள், சூர்ப்பணகாபங்கஸ்தலம், மாரீசவதஸ்தலம் முதலானவை இங்குக் காணவேண்டியவை. நாளடைவில் இது பெரிய நகரமாக அபிவிருத்தியடைந்து வருகிறது. இங்கு வைதிகர்கள் புனிதமாகத் தங்குவதற்குரிய இடம். கோதாவரிக்கரையில் ஸ்ரீசங்கராசார்ய மடமொன்றே. நூற்றுக்கணக்கான தர்மசாலைகள் இங்குள்ளன.

## த்வாரகா க்ஷேத்ர யாத்திரை.

பஞ்சவடிக்கு அடுத்தபடியாக த்வாரகைக்குச் செல்ல விரும்பினோம். பம்பாய் நகரத்திலிருந்தே த்வாரகைக்குச் செல்லவேண்டுமாதலால் நாஸிக்கிலிருந்து மீண்டும் பம்பாய் நகரம் வந்து ஸெண்ட்ரல் ஸ்டேஷன் வழியாகப் புறப்படலாயிற்று. த்வாரகை கடலில் மூழ்கிவிட்டதென்று பலரும், அது நம்முன்னோரால் வருந்தியும் ஸேவிக்கமுடியாத தலமென்று பலரும் சொல்லக் கேட்டிருந்ததுண்டு. உண்மை அப்படியில்லை. யாவரும் எளிதாகச் சென்று ஸேவிக்கலாம். பஞ்ச த்வாரகைகள் என்கிறார்கள். இவற்றுள் கோமதீ த்வாரகை தான் மிக முக்கியமானது. மற்றவை பேட த்வாரகை, ஸுதாமாபுரீ த்வாரகை, டாகோர் த்வாரகை, நாத த்வாரகை என்பனவாம். பாம்பேயிலிருந்து பரோடா, அஹமதாபாத், வீரங்காம், ராஜகோட், ஜாம்நகர் வழியாக கோமதீத்வாரகை சென்று சேர்ந்தோம். பாம்பேயிலிருந்து 36 மணி காலத்தில் த்வாரகை அடையக் கூடியது.

## டாகோர் த்வாரகை.

முதலில் டாகோர் த்வாரகை ஸேவிக்கப்பெற்றோம். பரோடாதாண்டி அஹமடாபாட் ஸ்டேஷனுக்கு முந்தியே ஆனந்த் ஜங்ஷனில் வண்டிமாறி டாகோர் ஸ்டேஷன்

சேர்ந்தால் ஒருமைல் தூரத்திலுள்ளது ஸன்னிதி. தீர்த்த ஸௌகர்யமும் தர்மசாலை வஸதியும் நன்றாகவுள்ளன. இங்கு த்வாரகாதீசனுடைய ஸன்னிதி மிகவும் விசாலமாய் மஹா வைபவங்கள் பொலிய நிற்கின்றது. பெருமானுக்கு உபசார விசேஷங்கள் அபரிமிதமானவை. இங்கிருந்து ஆனந்த் ஜங்ஷன் வழியாகவே அஹமதாபாத் சேர்ந்தோம்.

## (அஹமடாபாத்.)

இங்கு சபர்மதிநதிக்கரையில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு தர்மசாலை ஸௌகரியம் விசேஷமாகவுண்டு. பாலாஜீமந்திரமே தருமசாலையாகவுள்ளது. இவ்வூரில் அவசியம் காண வேண்டிய காட்சி யொன்றுண்டு, அதாவது கீதாமந்திரம். விலக்ஷண பகவதநுக்ரஹம் பெற்றவொரு பக்தசிகாமணியின் முயற்சியினால் பல லக்ஷரூபாய்ச் செலவில் வெகு விசாலமாயும் லோகோத்தரமாயும் அமைக்கப்பட்ட மந்திரமிது. இங்கு உட்புகும்போதே ஞானபக்தி விரக்திச்செல்வங்கள் நம்மைவந்து அணைத்துக்கொள்வன போலும். இதில் மூன்றுமாடிகளுள்ளன. பல விரக்தர்கள் பேரின்பமாக வாஸஞ்செய்து கொண்டிருக்கின்றார்கள். கீழே கீதை முழுவதையும் பதினெட்டு பகுதியாகப் பரமஸுந்தர தேவநாகர திவ்யலிபியில் சிலாசாஸனமாகப் பொறித்திருக்குமழகு எங்குங் காணமுடியாதது. இந்த மந்திரத்தை அமைத்த மஹாத்மா இங்கு வாழ்ந்துகொண்டிருக்கின்றார். காணவருபவர்களால் தெய்வம் போல் தொழப்படுகின்றார்.

## கோமதீ த்வாரகை.

அஹமதாபாதிலிருந்து 24 மணி காலம் செல்லவேண்டியிருக்கிறது கோமதீ த்வாரகைக்கு. இடையில் தங்காமல் செல்வது மிகவும் ச்ரமமாதலால் ஜாம்நகர் என்னுமிடத்தில் தங்கிப்போக நேர்ந்தது. இது மிகவும் ரமணீயமானதொரு நகரம். ஸ்டேஷனுக்கு அதிஸமீபத்திலேயே தர்மசாலைகளுண்டு. இவ்விடத்தில் தங்கி ச்ரமபரிஹாரம் செய்துகொண்டு அடுத்தவண்டியில்புறப்பட்டு த்வாரகைக்குச் செல்வது எளிது. த்வாரகா என்றேயுள்ள ஸ்டேஷனிலிருந்து ஒன்றரைமைல் தூரத்திலுள்ளது த்வாரகாதீசனுடைய திவ்யஸன்னிதி. இடைவழியில் தோதாத்ரிமட் என்கிற விசாலமான தோட்டமுள்ளது. இங்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்குவதற்கு மிகவும் ஸௌகரியமுண்டு. இத்தலம் ஸமுத்ர ப்ராந்தமாகையால் ஸாதாரணமாக உப்புத் தீர்த்தமே உள்ளது. சில கிணறுகளில் நல்ல தீர்த்தமுமுண்டு. த்வாரகா நாதனுடைய ஸன்னிதி மிகவும் விசாலமானது. கடற்கரையிலேயே ஸன்னிதியுள்ளது. இங்குப் பெருகிவருகிற கோமதீ நதியானது கடலோடுகூடி வருவதனால் அந்த நதியின்தீர்த்தமும் கடல்நீர்போன்றதே. பண்டரிநாதன் ஸன்னிதியிற்போல் இங்கும் எம்பெருமானுடைய திருவடிகளிலே தலையைமடுத்துத் தழுவித் தொழும்படியான ஏற்பாடு இருந்துவந்தது. காலநிலையை யநுஸரித்து அது தடைசெய்யப்பட்டுவிட்டது. சிறிது தூரத்திலிருந்தே ஸேவிக்கவேண்டிய நிலைமைதான் இப்போதுள்ளது.

## பேட த்வாரகை.

கோமதீ த்வாரகைக்குச் சிறிது சமீபத்திலுள்ளது பேட த்வாரகை யென்பது. ஓகாபோர்ட்டு என்கிற ஸ்டேஷனிலிறங்கி ஸ்டீம்போர்டில் சிறிதுகாலம் சென்று ஸேவிக்க வேண்டிய தலம். அங்கும் த்வாரகாநாதனுடைய மந்திரமே மிகவிசாலமாகவுள்ளது. போரபந்தர் என்று வழங்கப்படுகிற ஸுதாமாபுரியும் காணத்தக்கதே. ஆனால் அங்கு ஸன்னிதி யொன்றுமில்லை. பகவானில்லாத புதிய ஆலயமொன்று கட்டப்பட்டுள்ளது. இவ்வூரிலுள்ள வீடுகளெல்லாம் பெரும்பாலும் மணிமாடமாளிகைகளே. கண்ணையும் நெஞ்சையும் கவரும்படியானது நகர ஸன்னிவேசம். இதுவும் கடற்கரையிலுள்ளது. த்வாரகையிலிருந்து இவ்விடத்திற்கு ரைல்மார்க்கமும் பஸ்மார்க்கமுமுண்டு. அங்கே விசாரித்துக்கொள்வது.

## ப்ரபாஸ தீர்த்தம்.

இவ்வளவு தூரம் வந்தவர்கள் ப்ரபாஸ தீர்த்த மென்னுமிடமும் அவசியம் ஸேவிக்க வேணும். "மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை, ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான்" என்கிற பெரியாழ்வார் திருமொழியின்படியே, பன்னிரண்டு ஆண்டுகளுக்குமுன்பு மாண்டுபோயிருந்த ஸாந்தீபனி புத்திரனை குருதக்ஷிணையாக மீட்டுக்கொடுத்தவிடம் இது என்பர்கள். ஏகாந்தமாகவும் புனிதமாகவுமுள்ள தலமிது. வஸதி ஸௌகரியமுண்டு. விராவல் என்கிற ஸ்டேஷனிலிறங்கி இரண்டுகல் போகவேண்டும். அவ்விடமிருந்து திரும்பிவரும்போது ஜூனகட் என்கிற ஸ்டேஷனில் இறங்கினால் ஸ்ரீக்ருஷ்ணபகவானுடைய விஹாரஸ்தலமான ரைவதககிரியையும் அனுபவிக்கலாம். இங்கிருந்து மேஷாணு என்கிற ஜங்ஷனுக்கு வந்து சேர்ந்து அஜ்மீர்வழியில் பயணம் செய்ய ப்ராப்தம். அந்தவழியிலுள்ளது ஸித்தபூர்.

## ஸித்தபூர்.

இந்த க்ஷேத்ரம் மாத்ருகயை யென்று கொண்டாடப்படுகிறது. இவ்விடத்தில் ஸரஸ்வதியாறு பெருகுகின்றது. ஸ்டேஷனுக்கருகில் ஸ்ரீரங்கம் தாதாசார்யருடைய மந்திரமொன்று விசாலமாகவுள்ளது. அங்குத் தங்கியிருக்க மிகவும் ஸௌகரியமுண்டு. ஸரஸ்வதீ நதிக்கும் ஸமீபமேயது. இங்குச் சிலர் பிண்டப்ரதானமும் ச்ராத்தமும் செய்வதுண்டு.

## நாதத்வரா.

ஸித்தபூரிலிருந்து நேராக அஜ்மீர்போகும்வழியில் மார்வார்ஜங்ஷனில் இறங்கிக் குறுக்குவழியே செல்லும் ரைல்பாதையில் அடையவேண்டிய க்ஷேத்திரமிது. உதயபூர் ராஜ்யத்தில் சேர்ந்து வல்லபாசார்யர்களின் ஆதீனத்திலுள்ளதான இந்தக்ஷேத்ரம் பூலோகத்திற்குள் மிச்சிறந்ததென்று நம்முடைய மனத்திற்பட்டது. பஞ்சத்வாரகைகள் என்று கீழே ப்ரஸ்தாவித்திருந்தோமல்லவா? அவற்றுள் இத்தலமும் சேர்ந்ததென்கிறார்கள். இங்கும் ஸ்ரீக்ருஷ்ண பகவானுடைய மிகப்பெரிய ஸந்நிதியுள்ளது. தினப்படியாக இங்கே பல ஆயிரக்கணக்கான பக்தர்கள் வந்துதொழுகிறார்கள். பக்தியின்தாண்டவம் இங்குவெகு அற்புதமாகக்காண்கிறது. ஒவ்வொருநாளும் ஆயிரத்தைந்நூறு ரூபாய் செலவில் பகவானுக்குப் போகங்கள் நடைபெறுகின்றன. இதில் ஈஷத்தும் அதிசயோக்தியென்பது கிடையாது. மானிடப்பிறப்புப் பெற்றபாக்யவான்கள் ஒவ்வொருவரும் இந்த க்ஷேத்திரம்வந்து அவசியம் ஸேவிக்கவேணுமென்றே நமக்குத் தோன்றியது. தென்னாட்டினர் பலரும் இத்தலமிருப்பதை அடியோடு அறியார்கள். ஸ்ரீவைஷ்ணவகுலதிலகரான ஸ்ரீமந்நாதமுனிகள் இத்தலத்தில் சிலகாலம் எழுந்தருளியிருந்ததாகச் சொல்லுகிறார்கள். இவ்விடத்தெம்பெருமானுக்கு ஸ்ரீநாதன் என்று திருநாமம். ஆச்சரியமான சிங்காரங்களுடன் க்ஷணே க்ஷணே புதிய புதிய காட்சி தருமழகு பரமபோக்யமாகவுள்ளது. பரிமளத்ரவ்யங்கள் சேகரிக்க வெள்ளிமயமான ஏந்திரமும் தங்கமயமான ஏந்திரமும் இங்கிருப்பது விசேஷித்துக் காணத்தக்கது. அனேகலக்ஷம் ரூபாய் விலையுள்ள மணிகைஸாமான்கள் இங்கு சேகரிக்கப்பட்டிருக்கிற பரிசும், நெய்க்கிணறு எண்ணெய்க்கிணறு அமைத்திருக்கிற விசித்திரமும் இத்தலத்திற்கு அஸாதாரணமான அதிசயங்கள். இங்கு தர்மசாலைகள் பலவுள்ளன. ஸந்நிதி ஸமீபத்தில் ஒரு நதி பெருகுகின்றது. ஊரிலும் நீர்நிலைகள் பலவுண்டு. ஸகலவிதத்திலும் ரமணீயமான க்ஷேத்திரமிது.

## உஜ்ஜயிநீ.

நாதத்வாராவிலிருந்து உஜ்ஜயிநீக்ஷேத்ரம் சென்று சேரப்ராப்தமாயிற்று. [அஜ்மீரிலிருந்து ரட்லாம்போகிற ரைல் மார்க்கத்திலுள்ள சித்தோர்கட் என்னும் ஸ்டேஷனில் குறுக்குவழியாகச் சென்று சேர்ந்து அங்கிருந்து, ரட்லாம்—உஜ்ஜயின்.] * அயோத்யா

* மதுரா மாயா காசீ காஞ்சீ ஹ்யவந்திகா, புரீ த்வாரவதீசைவ ஸப்தைதா மோக்ஷதாயிகா: * என்று ப்ரஸித்தமான ஸப்தபுண்யபுரிகளில் அவந்திகா என்பது உஜ்ஜயிநீக்ஷேத்ரமே. கண்ணபிரான் ஸாந்தீபநி முனிவனிடம் அறுபத்தினன்கு நாட்களில் அறுபத்தினன்கு கலைகளைப்பயின்றதாகச் சொல்லுவது இத்தலத்திலேயே. இங்கு ஸாந்தீபநிமுனிவன் ஆச்ரமம் முதலானவிடங்கள் காணத்தக்கவை. இங்கு சிப்ரா என்கிற நிர்மலமான நதி ஆனந்தமாகப் பெருகுகின்றது. அதன்கரையில் மிகப்பெரிய ராமாநுஜகூடம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் புகலிடமானது.

## புஷ்கரக்ஷேத்ரம்.

உஜ்ஜயினியிலிருந்து புஷ்கரக்ஷேத்ரம் சென்றுசேரப்ராப்தமாயிற்று. [நாகதா ஜங்ஷன்வழியாய் அஜ்மீர்ஸ்டேஷன் சேர்ந்து அங்கிருந்து 9மைல்தூரம் பஸ்மார்க்கம் சென்று சேரவேண்டு மிடமிது.] புஷ்கரக்ஷேத்ரத்தின் பெருமை உலகமறிந்தது. நான்முகக்கடவுள் எம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்கத் தவம்புரிந்தகாலத்து, அப்பகவான் தீர்த்தரூபியாக ஸேவை ஸாதித்த தலமிது. இவ்விடத்திலுள்ள தீர்த்தவிசேஷத்திற்கே புஷ்கர மென்று திருநாமம். ஒருகாலும் வற்றாத மிகப்பெரிய தீர்த்தமிது. இதில்முதலைகளின் உபத்திரவம் அதிகமாதலால் அவதானத்தோடும் அச்சத்தோடும் நீராடவேண்டுமிங்கு. தென்னாட்டுத் திவ்யதேச முறையில் இங்கு ஸ்தாபிக்கப்பட்டுள்ள இரண்டு ஸன்னிதிகள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் புகலிடமானவை.

(ஒரு சிறுகுறிப்பு ; த்வாரகாயாத்திரையை முடித்துக்கொண்டு வித்தபூர்வந்து அங்கிருந்து நேராகப்புஷ்கரம் வந்து பிறகு நாதத்வாரா ஸேவித்து, அங்கிருந்து உஜ்ஜியிநி சென்று ஸேவித்து அங்கிருந்து மதுராப்ருந்தாவனம் சென்று சேர்வது எளியவழி.)

## மதுராப்ருந்தாவனம்.

புஷ்கரத்திலிருந்து வடமதுரை சென்று சேரப்ராப்தமாயிற்று. மதுரையில் யமுனைக் கரையிலேயே ப்ரயாககாட் என்கிறஸ்தலத்தில் வேணீமாதவமந்திரத்தில் ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்கியிருக்கஸௌகரியமுள்ளது. மதுரையிலிருந்தே பஸ்வழியாகவும் வண்டிவழியாகவும் கோகுலம் கோவர்த்தனம் சென்று ஸேவிக்கவேணும். மதுரையில்யமுநாநதீ ஸ்நானமும் புராதனமந்திரதர்சனமும் செய்யத்தக்கது. இங்கிருந்து 6-மைலிலுள்ளது ப்ருந்தாவனம். அங்கு கீர்த்திமூர்த்தியான. கோவர்த்தனம் ஆத்ய ரங்காசார்யஸ்வாமியின் சாச்வதகீர்த்திஜய ஸ்தம்பமாகிய ஸ்ரீரங்கஜீமந்திரத்திலேயே தேசாந்தரி ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்குயிருக்க வசதியுண்டு. ஸந்நிதியின் பரிஸரத்தில் விசேஷதர்மசாலைகளுமுண்டு. இவ்விடத்தில் ஆனந்தமாகக் காணவேண்டியவிடங்கள் பலவுள. கோபீவஸ்த்ராபஹாரகட்டம் காளியமர்த்தன கட்டம் கேசிஸம்ஹாரகட்டம் முதலான பலவிடங்களைப் பண்டாக்களின் உதவிகொண்டு காண்க. ஸேவாகுஞ்ஜம் என்று ப்ரஸித்தமான மிகரமணீயமான உத்யானவனம் நெஞ்சு கனிந்து ஸேவிக்கத்தக்கவை. இந்ததிவ்யோத்யானத்தில் ஸூர்யாஸ்தமனத்திற்குப் பிறகு யாரும் புகுவதும் தங்குவதுமில்லை. இற்றைக்கும் இங்கு இரவில் கண்ணபிரானுடைய விஹாரங்கள் வெகு உல்லாஸமாய் நடைபெறுவதாக ஐதிஹ்யம். இங்கு கோவர்த்தனம் ரங்காசார்யஸ்வாமி ஏற்படுத்தின ஸன்னிதியைக்காட்டிலும் புராதனமான பல மந்திரங்களுமுள்ளன.

நாச்சியார்திருமொழியில் * மற்றிருந்தீர்கட்கறியலாகா * என்கிற பதிகம் முதலாக மூன்றுபதிகங்கள் பேரின்பவெள்ளமே வடிவெடுத்தவை. பெரியாழ்வார் திருமொழியில் முதலிலிருந்து 260 பாசுரங்களும் அப்படிப்பட்டவையே. இப்பாசுரங்களையும் ஆழ்வானுடைய அதிமாநுஷஸ்தவத்தின் பிற்பகுதியையும் வாயாரப்பாடிக்கொண்டு யமுநாதீரத்திலும் ப்ருந்தாவன பரிஸரங்களிலும் ஐந்துநாள் உலாவி அந்தமில்பேரின்பமெய்தினேன். இத்தேசத்தாருடைய உபயோகத்திற்காக ஸ்ரீகோவர்த்தனம் ரங்காசார்யஸ்வாமி இட்டருளி

யிருக்கிற ஸம்ஸ்க்ருதபகவத் விஷய ஸ்ரீகோசத்தைவைத்துக்கொண்டு போதுபோக்கும் உத்தராதிபண்டிதர்கள் இங்கு உள்ளார்கள். அவர்களோடு கலந்து ஸம்ஸ்க்ருதத்திலும் ஹிந்தியிலும் இரண்டு நாள் குணாநுபவம் செய்யப்ராப்தமாயிற்று. பெருமாள்திருமொழியில் * ஏர்மலர் ப்பூங்குழல் * ஆலைநீள்கரும்பு * என்கிற இரண்டு பதிகங்களின் அர்த்தவிசேஷங்களை உபந்யஸிக்கக் கேட்டு அவர்கள் உள்குழைந்து உருவழிந்தபடியை என்னவென்று எழுதுவேன் !, " அழுகையுமஞ்சிநோக்கு மந்நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும், தொழுகையுமிவைகண்டவ சோதை தொல்லையின்பத்திறுதிகண்டாளே " என்கிற பாசுரம் அவர்களைப் படாதபாடும் படுத்திற்று.

## டெல்லிமாநகரம்,

ப்ருந்தாவனத்திலிருந்து டெல்லிசெல்லும் வழியில் **கோஸிகாலான்** என்கிற ஸ்டேஷனிலிறங்கி பஸ் அல்லது வண்டிவழியாக 6 மைல்தூரம் சென்று **நந்தகாம்** என்கிற தலத்தையடையலாம். நந்தக்ராமமென்பதுவே நந்தகாம் எனவழங்கப்பட்டு வருகின்றது. இங்கு ஒருசிறு குன்றின்மீது ஒரு கோவிலுள்ளது. இது முற்காலத்தில் ஸாமான்யமாக இருந்திருக்கும். ஸமீபகாலத்தில் தனிகர்களான பல ஸேட்டுக்களின் அபிமானத்தினால் இவ்வாலயத்தில் விசேஷகைங்கரியங்கள் நடைபெற்று, மிகரமணீயமான காட்சியுள்ளது. இங்கு நந்தகோபர் யசோதை பலராமன் ஒரு தோழனோடு கூடிய கண்ணன் ஆகிய இவர்களின் விக்ரஹ அமைப்பு கண்ணையும் நெஞ்சையும் மிகமிகக்கவர்கின்றது. அவர்கள் நிஜமான வடிவத்தோடு நிற்பது போலவே காணலாயிருக்கிற அதிசயம் பாராட்டத்தக்கது. இங்கே மிகப் பெரியதர்மசாலையுண்டு. இங்கிருந்து 4மைல்தூரத்தில் **பரஷாணு** என்கிற தலமுள்ளது. இது ராதையின் ஜன்மபூமியென்கிறார்கள். (அங்கு நாம்ஸேவிக்கப்பெற்றிலோம்.) இத்தலங்களைக்கண்டுகொண்டு மதுரைக்குச் சென்று சேரவும் ஸௌகரியமுண்டு; கோஸிகாலான் ஸ்டேஷனில் ஏறிடெல்லிபோய்ச் சேர்வது நலம்.

நமது தென்னாட்டிலிருந்து பல நூற்றுக்கணக்கான மஹான்கள் உத்யோகம் முதலியவற்றுக்காக டெல்லிமாநகரில் குடிமியிருப்பதால் சில பெரியோர்களின் நியமனத்தை முன்னிட்டுப் புது டெல்லிக்கு வந்து சேர்ந்து மூன்று நாள் தங்கியிருந்து சில ப்ரவசனங்கள் செய்ய ப்ராப்தமாயிற்று. இந்நகரில் வைதிகர்களுக்கு யமுநாநதீ ஸ்நானமொன்றே ப்ராப்தமாகக் கூடியது. பாண்டவர்களாண்ட விடங்கள், குதப்மினார் போன்ற சில அருமையான விடங்கள் தர்சநீயமாகவுள்ளன. புது டில்லியில் **பிர்ளாதர்ம சாலை** யாத்திரிகளுக்கு மிகவும் சௌகரியமான வசதி.

## குரு க்ஷேத்திரம்.

டில்லியிலிருந்து நான்கு மணி காலத்தில் குரு க்ஷேத்திரம் சென்று சேர்வது. (ரைல் மார்க்கந்தவிர பஸ் மார்க்கமுமுண்டு.) இங்கு ஸ்டேஷனுக்கருகில் தர்ம சாலையிலும் பண்டாக்கள் தருமிடங்களிலும் தங்கியிருக்கலாம். ஸூர்ய் குண்டத்தில் ஸ்நானம் இங்கு விசேஷமென்கிறார்கள். பீஷ்மர் சரதல்பத்தில் கிடந்தவிடம் காட்டப்படுகிறது. அங்கிருந்து நாலுகல் தூரத்தில் கீதோபதேசம் நிகழ்ந்தவிடம் அரசமர நிழலில் காட்டப்படுகிறது. மற்றும் சில விடங்களையும் பண்டாக்கள் காட்டுவர்கள்.

## ஹரித்வாரம்.

குரு க்ஷேத்திரத்திலிருந்து ஹரித்வாரம் சென்று சேர்வது. " அயோத்யா மதுரா மாயா " என்னும் ஸப்த புண்ய புரீஸங்ரஹ ச்லோகத்தில் மாயா என்றது ஹரித்வார க்ஷேத்ரத்தையே யென்கிறார்கள். கங்கைக்கு அக்கரையில் மாயா வென்று தனியே ஒரு க்ஷேத்திர முண்டென்பாருமுளர். இவ்விடத்திலிருந்தே பதரிகாச்ரமயாத்திரை தொடக்கமாகிறது.

# முப்பத்திரண்டு ஆனந்த வகைகள்.

உலகிற் பிறந்த மனிதர்கள் ஆனந்தமடைவதற்குப் பல நூற்றுக்கணக்கான காரணங்களுள்ளன. அவற்றை முப்பத்திரண்டுவகையாக வகுத்துத் தெரிவிப்போமிங்கு

1. பகவானுடைய திருக்கலியாண குணங்களைப் புத்தகங்களிற் கண்டும் பெரியார்களின் வாய்க்கேட்டும் உள்ளம் பூரித்து அவற்றை மேன்மேலும் மனனஞ் செய்து அந்த பகவானை ஹ்ருதயகோசத்தில் ஸாக்ஷாத்கரித்துப் பரமானந்தமடைவார் சிலர்.

2. * ஊன்வாடவுண்ணுதயிர் காவலிட்டு உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து தாம்வாடவாடத் தவஞ்செய்தும், காயோடு நீடு கனியுண்டு வீசுகடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து தீயூடுநின்று தவஞ்செய்தும் பேரின்ப மெய்துவார் சிலர்.

3. அர்ச்சாவதார ரூபியான எம்பெருமானை யனுபவித்து அவனுடைய வடிவழகினும் திவ்யாபரண திவ்யாயுத திவ்ய பீதாம்பர அலங்காரங்களிலுமீடுபட்டு நெஞ்சுருகிப் பெருமகிழ்ச்சியடைவார் சிலர்.

4. "சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே மதிட்கச்சியூரகமே பேரகமே" என்று ஆழ்வார்கள் வாய்வெருவிப் பாடியிருக்கின்ற திருப்பதிகளில் அடிக்கடி சென்று ஸேவித்து ஆனந்தவெள்ளம் பொங்கி நிற்பார் சிலர்.

5. கங்கை யமுனை ஸரஸ்வதி நர்மதை கிருஷ்ணை கோதாவரி துங்கபத்ரை காவேரி தாமிரபர்ணி வைகை வேகவதி என்றிப்படிப்பட்ட புண்ணிய நதிகளில் அடிக்கடி சென்று குடைந்தாடி ஸந்தோஷமெய்துவார் சிலர்.

9. ஆங்காங்கு திவ்யதேசங்களிலே நடைபெறும் ப்ரஹ்மோத்ஸவம் முதலிய உத்ஸவ விசேஷங்களைக் கண்ணாரக் கண்டும் காணக் காதலித்தும் களிப்பெய்துவார் சிலர்.

7. ஆழ்வார்களருளிச்செய்த திவ்யப் பிரபந்தங்களை ஒருவகைப் பிழையுமில்லாமல் கண்டபாடஞ்செய்து கர்ணாமிருதமாக அநுஸந்தானம்பண்ணி ஆனந்திப்பார் சிலர்.

8. அத்திவ்ய ப்ரபந்தங்களுக்குப் பூருவாசாரியர்க ளருளிச்செய்த வியாக்கியானங்களையெல்லாம் ஸதாசார்ய ஸந்நிதானத்தில் ஸத்ஸம்பிரதாய முறையிலே படிந்து கேட்டு ஸகலார்த்த விசேஷங்களையும் உள்ளத்திலே உறையவைத்துக்கொண்டு உகந்திருப்பார் சிலர்.

9. ஸ்ரீராமாயணம் ஸ்ரீபாகவதம் ஸ்ரீவிஷ்ணு புராணம் ஸ்ரீமஹாபாரதம் முதலான இதிஹாஸ புராணங்களை அநுதினம் நியம பூர்வகமாகப் பாராயணஞ் செய்து பரமானந்த மெய்துவார் சிலர்.

10. ஸ்ரீராமாயண ஸ்ரீபாகவதாதிகளின் உட்பொருள்களைச் சிறந்த வியாக்கியானங்களினால் நன்கறிந்து அவற்றை மஹாஸபைகளிலே பிரவசனஞ்செய்து அன்பர்களை மகிழ்வித்துப் புகழ் பெற்று மகிழ்வெய்துவார் சிலர்.

11. காளிதாஸாதி மஹா கவிகளியற்றிய காவ்யாலங்கார நாடக க்ரந்தங்களிலே சுவையறிந்து ச்ருங்காரரஸ மொன்றிலேயே யீடுபட்டு அதுதன்னிலேயே போது போக்காக விருந்து பேரின்ப மெய்துவார் சிலர்.

12. வேதத்தை யோதி அதில் பதம் க்ரமம் ஜடை கனம் வர்ணக்ரமம் முதலானவற்றிலும் பரிபூர்ண பரிச்ரமப்பட்டுத் தேர்ச்சியடைந்து உலகம் புகழநின்று பேரின்பம் பொலிவார் சிலர்.

13. பட்டபாஸ்கரர் வித்யாரண்யர் போல்வார் இயற்றிய வேத பாஷ்யங்களையும் அதி கரித்து வேதார்த்தங்களையும் தெளியவுணர்ந்து இதற்கு மேற்பட ஆனந்தமில்லை யென்றிருப்பார் சிலர்.

14. (வேதத்தில்) கர்மகாண்டம் ப்ரஹ்மகாண்டம் என்கிற விரண்டையும் உபய மீமாம் ஸைகளோடும் அதிகரித்து ஸந்தேஹ விபர்யயங்களில்லாமல் தெளிய வுணர்ந்து பிறர்க்கு முணர்த்திப் பரமானந்த சாலிகளாயிருப்பார் சிலர்.

15. வேதோக்தங்களான கருமங்களை வழுவில்லாமல் அநுஷ்டித்து ஸ்நான ஸந்த்யாவந்தன அக்நிஹோத்ராதிகளின் அநுஷ்டானங்களில் ஒரு குறையுமில்லாமல் "இருமுப் பொழுதேத்தி யெல்லை யில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டர்" என்று ஸ்ரீகுலசேகரப் பெருமாளருளிச்செய்தபடியே பஞ்சகால பராயணரா யிருந்து பேரின்ப வெள்ளத்தினுள்ளுறைவார் சிலர்.

16. ஸ்ரீவசனபூஷண ஆசார்ய ஹ்ருதயாதி திவ்ய ரஹஸ்யங்களையோதி அவற்றின் அர்த் தாநுபவத்தில் சுவடறிந்து இதர ஸகல சாஸ்த்ரங்களையும் காற்கடைக்கொண்டு அதுவே காலக்ஷேபமாகவிருந்து ஹர்ஷப்ரகர்ஷம் பொங்கி நிற்பார் சிலர்.

17. திவ்யதேச நித்யோத்ஸவாதிகளில் திவ்யப்ரபந்தஸேவை வேதபாராயணம் ஸ்தோத் ராநுஸந்தானம் முதலானவற்றைத் தம்தம் அதிகாராநுகுணமாகச் செய்து ஆனந்த ஸாகரமக்நர்களாயிருப்பார் சிலர்.

18. ஸன்னிதிகளிலே திருவாராதனம் செய்கை, பரிசாரகம் செய்கை, பெருமாளை யெழுந் தருளப்பண்ணுகை, வாத்யம் ஸேவிக்கை, வீணைவாசிக்கை, நர்த்தனமாடுகை, திரு மஞ்சனங்கொண்டுவருகை, திருத்துழாய் முதலியன சேகரிக்கை, ப்ரஸாதம் முத லியன விற்கை, அதிகாரங்கள் செலுத்திக் கார்யநிர்வாஹம்பண்ணுகை, இவை யொன்றுமில்லையாளுலும் "காம்பறத் தலைசிரைத்து உன்கடைத்தலையிருந்து வாழுஞ் சோம்பர்" என்று திருமாலையிலருளிச் செய்தபடியே வர்த்தித்தல் முத லானவை செய்து பெருமகிழ்ச்சி கொள்வார் சிலர்.

19. ஸன்னிதிகளில் ஸமய விசேஷங்களிலே தளிகைகள் ஸமர்ப்பித்தும் ததீயாராதனைகளைச் செய்வித்தும் பாகவதர்களை யாராதித்தும் பகவானையுகப்பித்தும் உகந்து நிற்பார் சிலர்.

20. ஸன்னிதிகளிலே கோபுரப்ராகார மண்டபாதிகளை நூதனமாக நிர்மாணம் செய்வித்தும் ஜீர்ணோத்தாரணங்கள் செய்வித்தும், திருவாபரணங்கள் திவ்யபீதாம்பரங்கள் ஸமர்ப்பித்தும், வேண்டிய வாஹனாதிகளைச் செய்வித்து ஸமர்ப்பித்தும், நித்யப்படி விசேஷப்படிகளுக்குவேண்டிய உபபத்திகளுக்கு மூலதனம் சேமித்துவைத்தும் பரம ஸந்தோஷசாலிகளாயிருப்பார் சிலர்.

21. ஸன்னிதிகளில் முன்னோர்கள் ஸம்பாதித்துப் பரம்பரையாக ப்ராப்தமாயிருக்கின்ற தீர்த்தமாலைமரியாதைகளையும் மிராசுகளையும் குறையற அநுபவித்துப் பேரின்ப மெய்துவார் சிலர்.

22. ஸன்னிதிகளுக்குச் சென்று ப்ரஸாத பணியாரங்களை வாங்கி வயிறாரவுண்டும் பாட்டுக் கேட்டும் கூத்துப்பார்த்தும் வாணவேடிக்கைகள் கண்டும், சேர்ந்தால் பாராயணாதி வைபவங்களை யநுபவித்தும் ஆனந்திகளாவார் சிலர்.

23. தமிழ் தெலுங்கு கன்னடம் மலையாளம் ஹிந்தி ஆங்கிலம் முதலானபாஷைகளில் அமைந்திருக்கின்ற இலக்கண விலக்கியங்களையும் பலவகைச் சரித்திரநூல்களையும் வாசித்து ப்ரவசனஞ் செய்து போதுபோக்கி யின்பம் நுகர்வார் சிலர்.

24. வைத்திய சாஸ்திரத்தை ப்ராசீனமுறையிலும் நவீனமுறையிலும் கற்றுத்தேறி ரோகிகளின் ரோகங்களையெல்லாம் தவிர்த்து இதுவே மஹானந்தமாக விருப்பார் சிலர்.

25. சோதிட நூலைக் கசடறக்கற்று ஜாதகமெழுதிக்கொடுப்பது ஆரூடங்கள் சொல்வது முதலியவற்றால் பிறரைக் களிப்பித்துக் களிப்புறுவார் சிலர்.

26. "தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கிவழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்று திருமழிசைப்பிரானருளிச்செய்தபடியே பிறர்க்குப் பாடங் கற்பித்தும் வியாக்யானங்கள் எழுதியும் ஓயாமல் புத்தகங்களை வாசித்தும் நல்லார் வாய்க் கதைகள் கேட்டும் பூஜ்யர்களான மஹான்களைப் பூஜித்தும் பேரின்பமெய்துவார் சிலர்.

27. உலகவாழ்க்கையிலேயே மண்டி நாவல்கள் ஸமாசார பத்திரிகைகள் முதலியன வாசித்தும் உதரபோஷணார்த்தமான வியாபாரங்களினால் உதரபோஷணம் பண்ணியும் சூதுசதுரங்கமாடியும் போதைப்போக்கிப் பெருங்களிப்புக் கொண்டிருப்பார் சிலர்.

28. தம்தம் படிப்புமுறைகளுக்குத் தக்கபடி பலவகையான உத்யோகங்களையும் வியாபாரங்களையுமேற்றுப் பொருளீட்டித் தாம் வாழ்ந்தும் தமரை வாழ்வித்தும் பரமானந்தம் பொங்கிநிற்பார் சிலர்.

29. க்ருஷிகளிலே யீடுபட்டு இரவும் பகலும் அதற்குரியவாறு உழைத்து தானியங்களை ஆர்ஜித்துத் தானதருமங்களைச்செய்து சந்தோஷம் பொங்கிநிற்பார் சிலர்.

30. பிறர் பலவகையான அநர்த்தங்களையடைந்து நோவுபடக்கண்டும், அப்படி நோவுபடுகைக்குத் தம்மாலான காரியங்களைச்செய்தும், நல்லகாரியங்களுக்குக் கூடுமானவரை இடையூறுகள்செய்தும், பிறர் மினுக்கங்கண்டு பொறாமையினால் அவர்கட்கு என்ன கெடுதல் செய்வோமென்று பாரித்தும் இதுவே தம்முடைய பிறவிக்குப் பெரும் பேறாக நினைத்துப் பரமானந்தக்கடலில் ஆழ்ந்திருப்பார் சிலர்.

31. உலகமோங்கிய புகழோடும் பெருமையோடும் வாழ்பவர்களுக்கு ஏதாவதொருபரிபவமோ மனக்கிலேசமோ நேருமாவென்று ஆசையுடன் எதிர்பார்த்து, அப்படியொன்றுநேர்ந்தவாறே நிதிபெற்ற தரித்திரன்போலவும் கண்பெற்றகுருடன்போலவும் மக்களைப்பெற்ற மலடன்போலவும் ஆனந்தவெள்ளத்தில் ஆழ்ந்திருப்பார் சிலர்.

32. பெரியார் தாம் சிரமப்பட்டு ஸம்பாதித்த ஞானத்தை உலகமுய்யப் பயன்படுத்த வேண்டி, நல்லார் ஆதரத்தோடு எதிர்பார்க்கவும் புகழவுங்கூடிய சிறந்த ஆராய்ச்சிகளை வெளியிட்டு அவற்றை மேன்மேலும் தகுந்த பிரமாணங்களினால் நிலைநிறுத்தி உலகம் போற்றநின்று பரமானந்தமடைந்து நிற்க, அபத்தமும் அஸம்பத்தமுமானவற்றையே யெழுதிச் சில பாமரர்களை யுகப்பித்து "மஹான்களைச் சரமாரியாக தூஷித்துவிட்டோம், பெரியார்களை வாயாரப் பழித்துவிட்டோம், வசவுபுராணத்தில் நாமே வெற்றிபெற்றுவிட்டோம்" என்று களித்துக் கூத்தாடிப் பரமானந்த வெள்ளத்தில் அமிழ்ந்திருப்பார் சிலர்.

ஸ்ரீ காஞ்சீ. அண்ணங்கராசாரியர் திரட்டிய

**முப்பத்திரண்டு ஆனந்தவகை முற்றிற்று.**

# அன்பர்களுக்கு விண்ணப்பம்.

உலகில் எத்தனை மனிதர்கள் இருக்கின்றார்களோ அத்தனை மதங்களு முண்டென்பர் பெரியோர். மிகச் சிறு விஷயங்களிற் போலவே மிகப் பெரிய விஷயங்களிலும் மதபேதங்களுண்டு. ஏகாதசி சிலர்க்கு இன்று, சிலர்க்கு நாளைக்கு, சிலர்க்கு நேற்று. அமாவாஸ்யையுமப்படியே. உபாகர்மம் இந்த மாதத்தில் சிலர்க்கு, அடுத்த மாதத்தில் சிலர்க்கு. ஜயந்தி, க்ருத்திகாதீபம் போன்ற எந்த விஷயமெடுத்துக் கொண்டாலும் அபரிமிதமான மதபேதங்களையே எங்கும் காண்கிறோம். ஒரு பிதாவுக்கு ச்ராத்தம் செய்கிற மூன்று புத்திரர்களில் நேற்று ஒருவரும் இன்று ஒருவரும் நாளை யொருவருமாகச் செய்வதை ஒரே ஊரிலும் ஒரே வீதியிலும் ஒரே க்ருஹத்திலும் காண்கிறோம். இப்படியாக நேருகின்ற பலவகைப்பட்ட வெவ்வேறு கொள்கைகளுக்காக ஒருவரையொருவர் நிந்திப்பதோ மனஸ்தாபப்படுவதோ எங்குங்காணாதது. அவச்யமானால் அவரவர்கள் தம் தம் ஆராய்ச்சிகளைத் தகுந்த உபபத்திகளுடன் உலகுக்கு உணர்த்துவதுதானுற்றது. இப்படிப்பட்ட விஷயங்களில் ஒன்றாகிய ஆச்சான் பிள்ளை விவாதம் எதிர்த்தலையில் எவ்விதமாகச் சென்றிருக்கிறதென்பதை அவரவர்கள் அறிந்தேயுள்ளார்கள். மயங்கவைத்தல் மருளவைத்தல் முதலிய ஒருவகைக் குற்றத்திற்கும் இலக்கல்லாத மணவாள மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளை ஸம்ரக்ஷிக்க வேண்டியே அடியேன் இவ்விஷயத்தில் விரிவான ஆராய்ச்சிகளை வெளியிட நேர்ந்தது. உலகமெல்லாமுகந்தது. இதில் இனியும் வெளியிடவேண்டிய விஷயங்கள் இருந்தாலும் இவ்வளவே போது மென்று நிறுத்திக்கொண்டேன். பிறர் இனி எது எழுதினாலும் எவ்வளவெழுதினாலும் அதில் அடியேன் சிறிதும் மறந்தும் கண் செலுத்தப்போகிறதில்லை. அவர்கள் தமது பத்திரிகையை இனியொருகாலும் அடியேனுக்கனுப்ப வேண்டாமென்றும் ஸவிநயம் பிரார்த்தித்து நிற்கிறேன்.

எந்த விதத்திலும் இனி நமது பத்திரிகையில் விவாத விஷயம் சிறிதும் தலைகாட்டமாட்டாதென்பதை மீண்டும் விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன். இது ஸம்பந்தமாக நூற்றுக்கணக்கான கடிதங்கள் பல அன்பர்களிடமிருந்து நம்மிடம் வந்திருக்கின்றன. அவையெல்லாவற்றையும் வெளியிடவேணுமென்கிற எண்ணமிருந்ததுண்டு. 14—8—49 ஞாயிற்றுக்கிழமை வெளிவந்த 'ஹிண்டு' பத்ரிகையில் இது ஸம்பந்தமான ஆராய்ச்சி வெளிவந்ததைக் கண்டபின் "அலம் திஷ்டஹதஸ்ய முத்கராபிகாதேந" என்கிற மஹாகவி வசனத்தையநுஸ்ரித்து அந்த எண்ணத்தை அடியோடு மாற்றிக்கொண்டேன். சில பெரியார்களின் கடிதங்கள் மாத்திரமே வெளியிடப்பட்டு இவ்வளவோடு ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி: என்றாகிறது.

இங்ஙனம்;

**ப்ர. அண்ணங்கரார்ய தாஸன்.**

---

# கடிதங்கள்.

## ஸ்ரீமான், உவே. ந்யாய வேதாந்த சிரோமணி. கனபாடி. திருக்கண்ணபுரம். வி. சௌரிராஜ ஐயங்கார். ஸ்ரீரங்கம் சிங்கமையங்கார் பாடசாலை வித்வான்.

லோகத்தில் பிறந்த ஒவ்வொருவர்க்கும் நண்பர்களுமுண்டு பகைவர்களுமுண்டு. அவர்கள் தங்கள்தங்களாலான காரியங்களை ஸமயவிசேஷங்களில் தம் ஆப்தர்களுக்கும் வைரிகளுக்கும் செய்யக்கடமைப்பட்டிருக்கிறார்கள். அன்னவர்கள் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாயுமிருந்தால் க்ரந்தஸம்பந்தமான விவாதங்களிலும் கலந்துகொண்டு ஒரு தலையைப் போற்றவும் ஒரு தலையைப் பழிக்கவும் ப்ராப்தமாய் விடுகிறது. இந்தமுறையில் ஆச்சான் பிள்ளை விஷயமான விவாதத்தில் கலந்துகொண்டு கீழ்ச் சொன்னவகையில் பரிமாறியிருக்கிறார்கள். இன்று சனிக்கிழமையா ஞாயிற்றுக்கிழமையா என்று விசாரம் ஏற்பட்டால், இதில் உன் அபிப்ராயமென்ன? உன் அபிப்ராயமென்ன? என்று பலரையும் கேட்டுக் கொண்டிருக்கவேண்டிய அவச்யமுண்டோ? பஞ்சாங்கத்தையோ டைரியையோ எடுத்துப் பார்த்து எளிதாகத் தெளியக் கூடிய விஷயமன்றோவிது. இதற்கும் அபிப்ராயம் வாங்கி வெளியிட்டால் அதைத்தடுப்பாரில்லை. இந்த முறையில் நடந்து வருகிற ஆச்சான்பிள்ளையபிப்ராய வெளியீடுகளில் ஒரு விஷயந்தான் அடியேனுக்கு மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றது.

அதாவது, ஒருவருடைய அபிப்ராயமும் வேண்டாத மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளுக்கு அபிப்ராயம் கொடுக்குமவர்கள்—நம்முடைய பாக்யவசத்தினால் இன்னமும் இவ்விபூதியை அலங்கரித்திருக்கின்ற ஸ்ரீஉவே. வித்வான். திரு. கோவிந்தாசார்ய ஸ்வாமி போல்வாரான மஹநீயர்களிடம் கேட்டதாக வெளியிட்டுக் கொள்ளமாட்டாமல் என்றைக்கோ திருநாடு சென்று சேர்ந்த மஹான்களிடம் கேட்டதாகத் தெரிவித்துக்கொள்ளுகிறார்களென்பதே. இதனால் என்ன தெரிகிறதென்றால், கண்ணுக்குக் காணாதவர்களே சொல்லக் கூடியதாயும், கண்காணநிற்கும் மஹாசார்யர்கள் இசையக் கூடாத தாயுமுள்ள அர்த்தமே இவர்களுடையது என்பதே. ஆச்சான் பிள்ளையும் பெரியவாச்சான் பிள்ளையும் வெவ்வேறு ஆசிரியர்களேயென்று நிஸ்ஸந்தேஹமாக நிலைத்துள்ள விஷயத்தை இக்காலத்தில் ஆசார்ய பீடத்தையலங்கரிக்கின்ற பெரியார்கள் பலரும் நிர்மத்ஸரமாக வெளியிடாநிற்க, அவர்களை வாசாமகோசரமாக தூஷிப்பதும் இதரர்களை பூஷிப்பதுமான விதனால் என்ன பரமார்த்தம் ஸித்தித்து விடுமென்பதை அவர்களே பரிசீலனை செய்து கொள்ளலாம்.

**தாஸன், சௌரிராஜன்.**

---

## மல்லி, வித்வான் கிடாம்பி ராமாநுஜாசார்யர் ஸ்வாமி, மேற்கு அடைய வளைந்தான் வீதி, ஸ்ரீரங்கம்.

இத்திருவரங்கம் பெரிகோயிலில் நெடுங்காலம் ஆசார்ய பீடத்தைச் சார்ந்து உபய வேதாந்தங்களும் நிர்வஹித்து சிஷ்யோஜ்ஜீவனம் செய்தருளிய மஹான்களான ஸ்ரீமத் மெய்யுவையங்கார்ஸ்வாமி, தேசிகவரதாசார்யஸ்வாமி யென்கிற ஸ்ரீரங்கநாராயண ஜீயர்ஸ்வாமி, உத்தமசீலி ரங்கஸ்வாமிஐயங்கார்ஸ்வாமி முதலான பெரியார்கள் ஸ்ரீமத் பரமஹம்ஸ அயோத்யா ராமாநுஜஜீயர்ஸ்வாமியை நடையாடும் பிரமாணத்திரட்டாகமதித்து ஆராய்ச்சி விஷயங்களில் அந்தஸ்வாமியினுடைய நிர்ணயங்களையே நிதியாகக் கொண்டிருந்தார்களென்பது யாருமறிந்ததே. பரமப்ராமாணிகரான அந்தஜீயர்ஸ்வாமி முப்பது நாற்பது வருஷங்களுக்கு முன்னமே ஆராய்ச்சிசெய்து "பரந்தரஹஸ்யம் ஆச்சான்பிள்ளை யருளிச்செய்ததேயொழியப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்ததன்று" என்று நிர்ணயித்து அச்சிட்

டிருப்பது ஒவ்வொருவர் திருமாளிகையிலும் விளங்காநிற்க, அவருடைய திருவுள்ளத்தையே சேமவைப்பாகக்கொண்டிருந்த மேலேகுறித்த மஹான்கள் திருநாடலங்கரித்துவிட்டார்களென்று, அவர்களிடம் ஒன்றுங் கேளாதவர்களுங்கூட இப்போது கேட்டதாகப் பொய்யெழுதி அஸதபிப்ராயம் கொடுப்பதனாலென்னாகும்? விசதவாக் சிகாமணிகளின் விசதமான திருவாக்கு ஸூர்ய சந்திரர்களுள்ளளவும் அழியாததன்றோ. மற்றையோருடைய ஸ்ரீஸூக்திகளாயிருந்தால் யாரும் எவ்விதமான கோலாஹலமும் செய்து தலைகீழாக்கப்பார்க்கலாம். மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியாயிற்றே. இதற்கொரு பொய்யுரையும் பயன்படாதென்பதை அறியாதாரில்லையே. தம்மிடத்தில் கைநீட்டி ஜீவனம் பெறுகிறவர்களைத் தம் இஷ்டப்படி யெழுதுவித்து எத்தனை அபிப்ராய பத்ரிகைகள் வெளியிட்டுக்கொண்டாலும் உண்மைக்கு ஒருகாலும் லோபமில்லை யென்பதையே விஜ்ஞாபித்துக்கொண்டு விரதனாகிறேன்.

## ஸ்ரீமான். உவே. வித்வான். (ஸ்ரீவில்லிபுத்தூர்)
## விஞ்சிமூர் ஆழ்வார் ஸ்வாமியின் ஸ்ரீமுகம்.

அவ்விடத்துப் பத்திரிகைகளை யெல்லாம் க்ரமேண ஸேவித்து இங்குள்ள ஸ்வாமிகளெல்லாரும் மஹானந்த ஸாகர மக்னர்களாயிருக்கிறார்கள். பாமரர்களுக்குங்கூட ப்ராமகமல்லாத ஷோடசாத்யாயியைப்பார்த்து ஒரு விவேகியும் அபிப்ராயம் மாற்றிக்கொள்ள ப்ரஸக்தியில்லை. பெரியாழ்வார்க்ருபையாலும் நாச்சியார் கடாக்ஷத்தாலும் இங்குள்ளவர்கள் உள்ளதை உள்ளபடியுணரும் பாக்யசாலிகளே. பொய்யாகவும் க்ருத்ரிம மாகவும் பிறர் செய்யும் பிரசாரங்களினால் ஸத்யம் அஸத்யமாய்விடாதன்றோ. தத்வத்ரய வியாக்யான ஸ்ரீஸூக்தியின் பொருளை அல்பஜ்ஞர்களுங்கூட வேறுபடுத்தமுடியாது. அல்பத்ரவ்ய லாபத்திலாசையினாலே அதை வேறுபடுத்துமவர்கள் பரலோகத்திலுள்ளவர்களையே ஸாக்ஷியிடுகிறார்கள். இந்த விபூதியில் பாங்காகப் பலமஹாசார்யர்கள் எழுந்தருளியிருந்து யதார்த்தமான அர்த்தத்தை அழகாகவெளியிட்டருளாநிற்க, என்றைக்கோ மறைந்த பெரியார்களை அபார்த்த வாதிகளாக ஆக்குவதில் ஆசார்யாபசாரமொழிய வேறுபயனில்லையே. மற்றது பின்.

தாஸன், வி. கி. ஆழ்வார்.
(1-8-49.)

## ஸ்ரீ. உ. வே. (ஸ்ரீவில்லிபுத்தூர்.)
## ரெ. வடபத்ர சாயி அரையர் ஸ்வாமியின் ஸ்ரீமுகம்.

பெரியவாச்சான் பிள்ளையையும் ஆச்சான்பிள்ளையையும் ஒரேவ்யக்தியாக அடியேன் ப்ரமிக்க ப்ரஸக்தியேகிடையாது. அடியேனென்ன? அக்ஷராஸ்யரான ஒருவரும் ப்ரமிக்க இடமில்லை. பரந்தாஹஸ்யம் ஆச்சான்பிள்ளையதேயென்கிற ஸித்தாந்தத்தில் இங்கு ஒருவர்க்கும் விப்ரதிபத்தியில்லை. நிர்ப்பந்தமுறைகளும் தாக்ஷிண்ய முறைகளும் சில நடந்துவருகின்றன. அதில் அடியேன் போல்வார்க்கு அந்வயமில்லை. திருவாய்மொழிப்பிள்ளை வியாக்யான விஷயத்தில் அடியேனுக்குள்ள அபிப்ராயபேதத்தை மாத்திரம் விஜ்ஞாபித்துக்கொண்டபடி. ஸ்வாமியிடத்தில் அபசாரம் கோரநரகஹேதுவென்று அடியேன் விரிவாக எழுதியிருந்ததை ஸூதர்சன பத்ராதிபர் அச்சிடாது விட்டிருக்கிறார். பரம் பரஸ்தாத்.

SIR, DOCTOR K. S. KRISHNAN, F.R.S.
DIRECTOR

UNIVERSITY BUILDINGS
DELHI, 20—6—49.

ஸ்வாமி திருவடித்தாமரைகளிலே அடியேன் கிருஷ்ணன் அனந்தமான தெண்டன் ஸமர்ப்பித்த விண்ணப்பம். தேவரீருடைய ஸ்ரீமுகம் ஸேவித்துக்கொண்டேன். தேவரீர் டெல்லிக்கு எழுந்தருளி தேவரீரை நேரில்ஸேவிக்கும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைக்குமென்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

ஸத்கிரந்தப்ரகாசன சபையிலிருந்து புத்தகங்கள் வந்து சேர்ந்தன. அவற்றில் சிலவற்றைப் படிப்பதற்கு அடியேனுக்கு அவகாசம் ஏற்பட்டது. தேவரீர் பரமகிருபையுடன் இப்பொழுது கிடைப்பதற்கரிதான பூர்வர்கள் கிரந்தங்களையும் புதிய ஸம்ப்ரதாய க்ரந்தங்களையும் கட்டுரைகளையும் அச்சிட்டுப்பண்ணும் மஹோபகாரத்துக்குக் கைம்மாறில்லை.

தேவரீர் நம் ராமானுஜனில் எழுதி உபகரிப்பதை அப்போதைக்கப்போது அடியேன் ஸேவித்துப் பரமானந்தமடைந்து வருவதுண்டு. எட்டாவது இதழில் தேவரீரருளிச்செய்த ஆச்சான்பிள்ளை அஷ்டாத்யாயிபை விசேஷித்து ஸேவித்துக்களித்தேன். அதில் 21–வது பகுதியில் நம்பிள்ளை பட்டரை ஸாக்ஷாத்தாக ஸேவித்திருக்கமுடியுமா?" என்ற கேள்வி எழுந்தபொழுது அதற்குச்சமாதானமாக ஒரு மகான் ஏறுளுமிறையோன் திருவாய் மொழியில் எட்டாம் பாட்டின் ஈட்டில் " இது பட்டாருளிச்செய்ய நான்கேட்டேனென்று பிள்ளையருளிச்செய்வர் " என்றுள்ள ஸ்ரீஸூக்தியை எடுத்துக்காட்டியதாக உள்ளது. இதைப் படித்தபொழுது இதைப்போன்ற இன்னொரு ஸ்ரீஸூக்தி அடியேனுடைய ஞாபகத்துக்கு வந்தது. அதாவது பெரியதிருமொழி (5,5,) வெருவாதாளின் வ்யாக்யானத்தில்

"......என்று பட்டர் அமலனாதி பிரானருளிச் செயயாநிற்க நான் கேட்டேன் என்று பிள்ளையருளிச்செய்தார் " என்ற பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி.

இன்னொரு ஈட்டு ஸ்ரீஸூக்தியும் ஞாபகத்துக்குவருகிறது. * அருள்பெறுவாரின் ஈட்டில் (10,6,)

> [அதுநமது விதிவகையே]—" அதுநம்முடைய பாக்யாநுகுணமாகவிறே "
> என்று இதுக்குப் பூர்வர்கள் நிர்வஹிக்கும்படி. இத்தை எம்பெருமானார்
> கேட்டருளி " இத்திருவாய்மொழியில் மேலோடுகிற ரஸத்தோடு சேராது.
> நாம் விதித்தபடியே செய்வானுயிருந்தானென்கிறூர் என்றருளிச் செய்வர் "

என்று வடக்குத்திருவீதிப்பிள்ளையருளிச்செய்து, பின்னும் பத்துவரிகளுக்குப்பிறகு,

> * ததாநுஜாநந்தமுதாரவீக்ஷணை: * இது பட்டர்தாமே யருளிச்செய்ய நான்
> கேட்டேன் " என்று அருளிச்செய்தார். சேனைமுதலியார் சட்டையும் மயிர்க்
> கட்டும் கையும் பிரம்புமாய் வந்து புகுரப்புக்கவாறே, நாய்ச்சிமாரும் தானு
> மாய் ஸ்வைரமாக விருக்கிறவது தவிர்ந்து நாய்ச்சிமாரும் ஸிம்ஹாஸனத்தில்
> ஒருமூலைகளிலே ஒதுங்கத் தானும் ஸவிநயமாகவிருக்குமாய்த்து, வ்ருத்த
> ஸாமந்தரைக் கண்ட ராஜாக் களைப்போலே. இவர்தாமும் " இவ்விருப்புக்குத்
> தண்ணீர்த் துரும்பாக வொண்ணாது " என்று ஜகந்நிர்வாஹத்துக்கு வேண்டு
> மவற்றைப் பாசுரப் பரப்பற விண்ணப்பம் செய்வாராய்த்து,........" இன்
> னானை ப்ரஹ்மாவாக்கவேணும், இன்னானைமாற்றவேணும் " என்று வேண்டு
> மவற்றைச் சுருங்க விண்ணப்பம் செய்வர். " ஐயர் யாதொன்று சொல்லிற்று
> அவையெல்லாமப்படியே என்று கண்களாலே மேலெழுத்திட்டுக் கொடுக்கும்.
> இவ்வார்த்தை யருளிச்செய்தபோது கிடாம்பியாச்சானோடு அல்லாதாரோடு
> வாசியற குமிழிநீருண்டது "

என்று அருளிச் செய்து, அதற்குப்பின்

"ஆச்சான்தான் பட்டர்க்கு ஸ்நேஹித்திருக்கும் போர"
என்று அருளிச் செய்து, ஒரு ப்ரஸித்தமான ஐதிஹ்யத்தையும் அருளிச் செய்கிறார்.

இந்த ஈட்டு ஸ்ரீஸூக்திகளில் "பட்டர்தாமே அருளிச்செய்ய நான்கேட்டேன்" என்று அருளிச் செய்தது நம்பிள்ளையென்றும், "ஸேனைமுதலியார்" தொடங்கி "இவ் வார்த்தை" யளவும் பட்டர் ஸ்ரீஸூக்தியென்றும் தோன்றுகிறது.

ஆனால் இவ்விடத்து ஜீயர் அரும்பதவுரையில் அருளிச்செய்தார் நஞ்சீயர் என்றபடி என்று இருப்பதால் நஞ்சீயரல்ல நம்பிள்ளை யென்று சொல்ல அடியேனுக்கு பலம் போராது.

"ஸேனைமுதலியார்" முதல் "இவ்வார்த்தை" வரை பட்டர் ஸ்ரீஸூக்தியென்று கொள்வதற்கும் ஜீயர் அரும்பதவுரை இடங்கொடுக்கவில்லை. இதை ஸ்வாமிபோல்வார் ஆராய்ந்து நிர்ணயிப்பது,

தாஸன்

**கிருஷ்ணன்.**

---

C. S. PARTHASARATHI, B.A., B.L., 1, TODARMAL SQUARE,
NEW DELHI, 12—7—49.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீ உ. ப. வே. ஸ்வாமி சன்னிதியில் தண்டம் சமர்ப்பித்த விஞ்ஞாபனம். அடியேனிடம் வந்த "ஷோடசாத்யாயியை" வாசித்தேன். அதில் மற்ற விவாத விஷயங்களிருக்க, பாரா 22-ல் போன நவம்பர் மாதத்தில் இங்கு டில்லியில் ஸ்வாமி நடத்திய உபந்யாஸங்களில் "ஸ்ரீராமாநுஜர் தங்களுடைய ஸ்ரீபாஷ்யத்தில் மற்ற பாஷ்யங்களைச் சிறிதளவேனும் எங்கும் குறைத்துப் பேசவில்லை" என்று சொன்னதை ஆக்ஷேபித்து, ஸ்ரீ P. B. A. ஸ்வாமி ஸர்வ சித்தாந்த சமரஸக்கொள்கையை ஸ்ரீராமாநுஜர் கொள்கையாக உபந்யஸித்தார்; அது அஸத்ய வாக்கு என்று எழுதியிருப்பது மிகவும் முக்கியமாகக் கண்டிக்கத் தகுந்த விஷயம். அபிப்ராய பேதம் தூஷணையாகுமோ!

தாம் அருளிச்செய்த எல்லா க்ரந்தங்களிலும் உடையவர் பருஷமான பதங்களைத் தவிர்த்திருக்கிறார் என்பது எதிரிகள் கோஷ்டியிலும் ப்ரஸித்தம். வேறுவிதமாய் அவர் வாக்கியங்களை க்ரஹிப்பது அவர் இயற்கைக்கு விரோதம். சங்கர மத்வ சித்தாந்தத்திலிருந்து இவர் மாறுபட்ட கொள்கையை யுடையவர் என்பது உலகறிந்ததே. அப்படி இருப்பினும், பிறர் மனது புண்படாமல் தமது சித்தாந்தத்தை நிலைநாட்டியுள்ளார். இதையே, ஸ்ரீ ஸ்வாமி மேற்கூறிய உபந்யாஸங்களில் எடுத்துக் காட்டினது. "அபிப்ராய பேதத்திற்காக தூஷணை செய்ய வேண்டிய அவச்யமே யில்லை" என்று பாரா 21-ல் எழுதினவர்களே தூஷிப்பது மிகத்தவறு. இப்பெருங்குணம் நம் உடையவரிடத்தில் பொருந்தாதோ? வேறு விதமாகக் கொள்ளில் நம் வள்ளல் இராமாநுசன்பால் அபசாரப்பட்டபடியாகும்.

தாஸன்,

C. S. **பார்த்தஸாரதி** B. A., B.L.

---

ஸ்ரீ:

# அஷ்டமபிருதம் அத்யந்தம் அநுரூபமானதே.

ஸ்ரீசைலேச பாதுகாஸஹஸ்ரம் என்று பெயரிட்டு மணவாள மாமுனிகள் விஷயமாக ஆயிரம் ச்லோகம் விஜ்ஞாபித்து அவற்றை உரையுடன் வெளியிட்டிருக்கிறே னென்பதை உலகமறியும். அந்த ஸஹஸ்ரத்தில் "திதிமாலாபத்ததி" என்பது மொன்று. அதில் நான்காவது ச்லோகம்—

"𑌤𑌿𑌮𑌿𑌰𑌂 𑌨𑌿𑌰𑌸𑌿𑌤𑍁𑌮𑌵𑌨𑍌 𑌤𑌦𑌾 𑌤𑌦𑌾 𑌜𑌨𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌤𑌃 𑌫𑌣𑌿𑌨𑌃 ।
𑌯𑌨𑍍𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌰𑌿𑌹 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍀 𑌤𑌂 𑌵𑌰𑌯𑍋𑌗𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌵𑌿𑌰𑌤𑌂 𑌸𑍍𑌤𑍁𑌮𑌹𑍇 ॥"

[திமிரம் நிரஸிதுமவநௌ ததா ததா ஜந்ம குர்வத: பணிந:,
யந்மூர்த்திரிஹ சதுர்த்தீ தம் வரயோகீந்த்ரமவிரதம் ஸ்துமஹே.] என்பது.

சதுர்த்தீ திதியின் ஸூசநம் வரவேண்டிய ச்லோகமிது. மணவாள மாமுனிக ளின் திருக்கோலம் சதுர்த்தி—நான்காவது. என்று விஜ்ஞாபனம் செய்யப்பட்டது இதில். எப்படி நான்காவதென்னில்; அந்த ஸஹஸ்ரத்திலேயே நக்ஷத்ரமாலாபத்ததியில் கடைசி ச்லோகத்தில் இது விவரிக்கப்பட்டது; அந்த ச்லோகமாவது—

"𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑌿𑌰𑍇𑌵𑌤𑍀𑌸𑍌 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌵𑌰𑍋𑌪𑌯𑌨𑍍𑌤𑍃𑌮𑍁𑌨𑍀 ।
𑌇𑌤𑍍𑌯𑌵𑌤𑌾𑌰𑌾𑌨𑍍 𑌚𑌤𑍁𑌰𑌃 𑌚𑌤𑍁𑌰𑌃 𑌕𑍃𑌤𑌵𑌾𑌨𑍍 𑌫𑌣𑍀𑌨𑍍𑌦𑍍𑌰 𑌏𑌵 𑌪𑌰𑌂 ॥"

[ஸௌமித்ரிரேவதீஸௌ ஸ்ரீராமாநுஜ வரோபயந்த்ருமுநீ,
இத்யவதாராந் சதுர: சதுர: க்ருதவாந் பணீந்த்ர ஏவ பரம்.] என்பதாம்.

ரேவதீ நக்ஷத்ரத்திற்கான ச்லோகமிது. இதன் கருத்தாவது, இளையபெருமாள் நம்பி மூத்தபிரான் எம்பெருமானார் மணவாள மாமுனிகள் என்கிற நான்கு அவதாரங்களைச் செய்த திருவனந்தாழ்வானே சதுரன் என்பதாம். இந்த நிரூபணத்தின்படி மாமுனிகளின் திருமூர்த்தி சதுர்த்தியாயிற்று.

அந்த திதிமாலையிலேயே பதின்மூன்றுவது ச்லோகத்தில் மணவாள மாமுனிகளின் திருமூர்த்தி த்ரயோதசியாகவும் விஜ்ஞாபிக்கப்பட்டது. எங்ஙனே யென்னில்—

"𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌪𑌤𑍍𑌯𑍋𑌰𑍍𑌨𑌿𑌯𑍋𑌗𑌾𑌤𑍍 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶 𑌜𑌾𑌤𑌾 𑌹𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌸𑍂𑌰𑌿𑌵𑌰𑌾𑌃 ।
𑌅𑌥 𑌚 𑌤𑍍𑌰𑌯𑍋𑌦𑌶𑍀𑌯𑌂 𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌰𑌯𑍋𑌗𑌿𑌰𑍂𑌪𑌿𑌣𑍀 𑌰𑍇𑌜𑍇 ॥"

[லக்ஷ்மீபதோர் நியோகாத் த்வாதச ஜாதாஹி திவ்ய ஸூரிவரா:,
அதச த்ரயோதசீயம் மூர்த்திர் வரயோகிரூபிணீ ரேஜே.]

என்பது அந்த ச்லோகம். த்வாதசாதித்யர்கள் போன்ற பன்னிரண்டு ஆழ்வார்களுக்குப் பிறகு 'த்ரயோதசீ மூர்த்தி:' [பதின்மூன்றுவது திருக்கோலம்] என்னும்படியாக மணவாள மாமுனிகளின் திருவவதாரமாயிற்றென்றபடி.

அதிலேயே அடுத்த ச்லோகத்தில் மணவாள மாமுனிகள் 'சதுர்தசீம் குருபீடம்' அலங்கரிப்பவர் (அதாவது பதினான்காவதான ஆசார்ய ஸிம்ஹாஸனத்தை அலங்கரிப்பவர்) என்று விஜ்ஞாபனம் செய்யப்பட்டது;

"𑌜𑍇𑌜𑍇𑌤𑍁 𑌨𑌾𑌥𑌮𑍁𑌨𑌿𑌦𑌤𑍍𑌤𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍀𑌮𑌤𑍍𑌰 𑌜𑌗𑌤𑌿 𑌗𑍁𑌰𑍁𑌪𑍀𑌠𑍀𑌮𑍍 ।
𑌯𑍋𑌽𑌲𑌙𑍍𑌕𑍃𑌤𑍍𑌯 𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌰𑌾𑌜𑌤𑍇 𑌸 𑌵𑌰𑌵𑌰𑌯𑍋𑌗𑍀 ॥"

[ஜேஜேது நாதமுநிதச் சதுர்தசீமத்ர ஜகதி குருபீடம்,
யோலங்க்ருத்ய விலக்ஷணகீர்த்திர் விராஜ ஸ வரவரயோகீ]

என்பது அந்த ச்லோகம். 1. நாதமுனிகள். 2. உய்யக்கொண்டார். 3. மணக்கால்நம்பி. 4. ஆளவந்தார். 5. பெரியநம்பி. 6. எம்பெருமானார். 7. எம்பார். 8. பட்டர். 9. நஞ்சீயர். 10. நம்பிள்ளை. 11. வடக்குத் திருவீதிப்பிள்ளை. 12. பிள்ளைலோகாசார்யர். 13. திருவாய்மொழிப்பிள்ளை. 14. மணவாளமாமுனிகள் – என்னுமிந்த அடைவில் விவரணம் காண்க.

இனி அஷ்டமபிருதத்தின் ஆநுரூப்யம் விவரிக்கப்படுகிறது. உபதேச ரத்தினமாலையில் மணவாள மாமுனிகள் ஆறு திருநாமங்களையே வ்யாக்க்யான கர்த்தாக்களாகக் குறிப்பிட்டருளினர்; திருக்குருகைப்பிரான் பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, அழகியமணவாளப் பெருமாள் நாயனர், அழகியமணவாளச்சீயர்—ஆக இவ்வாறு திருநாமங்கள். ஏழாமவரான [ஸப்தமரான] வ்யாக்க்யாதா மணவாள மாமுனிகள் என்பது ஜகத் ப்ரஸித்தம். அவர்க்குப் பிறகு, ஸகல திவ்யப்ரபந்தங்களுக்கும் ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் ஸகல ரஹஸ்யங்களுக்கும், மற்றும் பலபல க்ரந்தங்களுக்கும் வையமுகந்த வியாக்கியானங்களை யியற்றி வெளியிடுபவன் அடியேனொருவனே யாதலால் வ்யாக்க்யாத்ரு பரம்பரையில் அஷ்டமஸ்தானம் அடியேனுடையதேயாக உபபத்தியுள்ளது. இந்தப் பரமரஹஸ்யத்தை உலகம் அநுஸந்திக்க அவகாச மளித்த மஹான்களுக்குப் பல்லாண்டு.

---

## ஆழ்வானுக்கு நேர்ந்த ஆபத்தின் நிதானம்

—[o]—

கொடுங்கோன்மையில் தலைநின்ற சோழராஜனுடைய ஸபையிலே கூரத்தாழ்வானுக்குத் திருக்கண் போக்கப்பட்டதென்று வைபவநூல்களில் வாசிக்கிறோம். ஆழ்வான் ஸ்ரீமந் நாராயணனுடைய பரத்வத்தை உபந்யஸித் தருளினதற்காக இந்தக் கெடுதல் உண்டு பண்ணப்பட்டதா? அல்லது தேவதா தூஷணம் செய்ததற்காகவா? என்பது ஓர் ஆராய்ச்சி. பின்பழகிய பெருமாள்சீயர் பணித்த ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் இந்த வரலாறு எழுதுமிடத்தில்—"ஆழ்வானை நோக்கி அரசன் நீர் பெரிய வித்வானுகையாலே உமக்கு வேண்டினபடி யெல்லாம் சொல்லவல்லீர்; அங்ஙனன்று; நான் சொன்னபடியே * சிவாத் பரதரம் நாஸ்தி யென்று எழுத்திடும் என்று ஓலையைக் கையிலே கொடுத்துக் கனக்க நிர்ப்பந்திக்க, கூரத்தாழ்வானும் தம்முடைய த்ருடாத்யவஸாயமாம்படியே * சிவாத் பரதரம் நாஸ்தி த்ரோணமஸ்தி தத: பரம் * என்று எழுத்திட்டருளினர். சோழனும் இவர் இப்படி பரிஹஸித்து ஓலைக்கு ஒப்பமிட்டபடிகண்டு அத்யந்த கோபாக்ராந்த சித்தனாய்

நேத்ரோத்பாடனம் பண்ணச் சொல்ல" என்று பங்க்திகள் காணப்படுகின்றன. பிள்ளை லோகஞ்சீய ரியற்றிய ராமாநுஜார்ய திவ்ய சரிதையிலும் (பக்கம் 193-ல்) இப்படியே யெழுதப்பட்டுள்ளது. "ஆழ்வான் * த்ரோணமஸ்தி தத : பரமென்று எழுத்திட்டதைக் கேட்டு ராஜாவும் குபிதனாய் 'என் முன்பே நீர் இப்படி யெழுத்திடுகையாலே க்ரூரதண்டம் பண்ணவேணும் ; நீர் ப்ராஹ்மணராகையாலே வதார்ஹரன்று; உமக்கு தண்டம் நேத்ரோத்பாடனம்' என்ன" என்கிற பங்க்திகள் உள்ளன.

இவ்விரண்டு க்ரந்தங்களுக்கும் மூலமாய் ஸ்வாமிஎம்பெருமானாருடைய நியமனத்தினால் கருடவாஹன பண்டிதர் இயற்றியதான திவ்யஸூரி சரிதத்திலும் கடைசியான பதினெட்டாவது ஸர்க்கத்தில் 79, 80 ஆம் ச்லோகங்களில் இவ்வண்ணமே கூறப்பட்டிராநின்றது. உண்மையில் அவ்வரசன் பரதெய்வமாகக் கொண்டிருந்த வொரு தெய்வத்தைப் பற்றி ஆழ்வான் இழிவாக எழுத்திட்டது காரணமாகவே உக்ரதண்டனையை அநுபவிக்க நேர்ந்தது. ஆழ்வான் அப்படி எதற்காக தைவதூஷணம் பண்ணவேணுமென்று சிலர் க்ஷேபிக்கக் கூடும். பகவத் பக்தியின் உறைப்பே இதற்குக்காரணமென்று ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. 'பகவத் பக்தி அபரிமிதமாகத்தானிருக்கட்டுமே; அதனால் ஸ்ரீமந்நாராயணனை அபரிமிதமாக பூஜிக்கலாமேயல்லது * சிவம் மஹாபாகவதம் ஸ்மராமி * என்று பரமபாகவதனாகப் போற்றப்பட்ட சிவனைப் பழிக்கவும் பரிஹஸிக்கவும் வேணுமோ? என்று கேட்பவர்கள் பகவத்பக்தியின் கனம் படுத்தும்பாடு அறியாதவர்களேயாவர். திருமாலையில் எட்டாவது பாட்டையும் இங்கே நினைப்பூட்டுகிறோம். அதில் "குறிப்பெனக்கடையுமாகில் கூடுமேல் தலையையாங்கே அறுப்பதே கருமங்கண்டாய் அரங்கமாநகருளானே" என்றருளிச் செய்கிறார் தொண்டரடிப்பொடியாழ்வார். "யதாசக்தி நிக்ருஹ்ணீயாத் தேவதாகுருநிந்தகாந்" என்று சாஸ்த்ரமும் சொல்லிற்று. பரதைவத்தையும் ஆசார்யர்களையும் குறையப் பேசுமவர்களை ஆனமட்டும் நிக்ரஹிக்கவேண்டுமென்று சாஸ்த்ரநியமனம். ஆனமட்டும் நிக்ரஹிக்கை யென்பது அவரவர்களுடைய சக்தியையும் ஆஸ்தையையும் பொறுத்தது. எல்லையான நிக்ரஹத்தைத் தொண்டரடிப்பொடியாழ்வார் காட்டினார். இதைப் பின்பற்றி பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ-உத்தரசதகத்தில் "வரத! ஸுகதபாசச் சோரலாவம் விலாவ்ய:" என்று கைகூசாது எழுதிவைத்தார். ஜைந பௌத்தாதிகளை, பொங்கலுக்கு இஞ்சி திருத்துகிறாப்போலே நறுக்கு நறுக்கென்று நொறுக்கவேணுமென்கிறார் பட்டர்.

மேலெடுத்த திருமாலைப் பாசுரத்தின் வியாக்கியானத்தில் பெரியவாச்சான்பிள்ளை அருமையாகச் சில விஷயங்களை யருளிச் செய்கிறார்;—எதிரியின் தலையை யறுத்துவிடுவதில் லாபமென்ன ? என்னில் ; மறுபடியும் அவன்வாயிலிருந்து பகவந்நிந்தையைக் கேட்க அவகாசமிராது ; அவனும் பகவந்நிந்தை பண்ணி அநர்த்தப்படாமலிருக்க நேரும் ; அறுப்பவனுக்கும் நல்லகதியுண்டு, அறுப்புண்பவனுக்கும் நல்லகதியுண்டு என்கிறார். ஆனாலும் இவ்வாழ்வார் பரமசாந்தரன்றோ ; தலையை யறுக்கலாமென்று இவரே தமது சிறந்த நூலில் நியமித்துவைக்கலாமோ வென்று கேட்டுக் கொண்டு, யாஜ்ஞிகபசுஹிம்ஸை போலே இது சாஸ்த்ர ஸம்மதந்தானே யென்று முடிக்கிறார். பகவந்நிந்தையோ ஆசார்யநிந்தையோ பண்ணுவாரை அஸாதாரண ப்ரேமயுக்தர்கள் நலியவேண்டியது அவச்யமே யென்றும், அவர்களுக்கு அது தவிர வேறு காரியமே யிருக்க வேண்டாமென்றும் நியமிக்கிறார் பெரியவாச்சான்பிள்ளை.

இப்படிச் செய்தால் ராஜ தண்டனை நேர்ந்துவிடாதோ வென்கிற சங்கை தோன்றக் கூடியதே. அதற்காகவே ஆழ்வார் "கூடுமேல்" என்று இடையிலே வெகு சதுரராக

அருளிச்செய்தார். அதற்குப் பெரியவாச்சான்பிள்ளை ரஸகனமாக வியாக்கியானம் செய்துள்ளார். "தான் அவன்கையிலே அகப்படாதபடி எதிரியை நிரஸித்துத் தப்பவல்ல சக்தி யோகமுண்டாகில்" என்பது வியாக்கியான ஸ்ரீ ஸூக்தி. அஸாமர்த்தியத்தினால் எதிரி கையிலே அகப்பட்டுக் கொண்டு அவன் மூலமாகவோ அரசாங்க மூலமாகவோ அனர்த்த மடையாதபடி ப்ரவ்ருத்திபண்ண வேணுமென்பது மூலகாரர்க்கும் வ்யாக்யாதாவுக்கும் திருவுள்ளம். ஆழ்வானுக்கு ஸகலவித ஸாமர்த்தியமும் நிரம்பியிருந்தும் விபரீத பகவத் ஸங்கல்ப விசேஷத்தினால் இவ்விஷயத்தில் ஸாமர்த்தியம் குறைவுபட்டிருந்ததுபோலும். ஆழ்வார் 'கூடுமேல்' என்று கூறினதை நன்கு குறிக்கொள்ளாமலே ஸ்ரீமந்நாராயண பக்தி விசேஷ ப்ரபாவத்தினால் பதறி தேவதாநிந்தனம் செய்து ராஜதண்டனைக்கு ஆளாயினர். அதனாலென்ன ? தர்சன ஸம்ரக்ஷணத்தில் அவர்க்கு அநிதரஸாதாரணமாயிருந்த ஊற்றம் இதனால் வெளியாவதில் என்ன குறை ?

மஹா பாகவதனை சிவனுடைய தூஷணத்தினால்தானே அவர்க்கு ராஜதண்டனை ஏற்பட்டதென்று இதையே சொல்லிக் கொண்டு தூஷிக்க நாநீட்டியிருக்குமவர்கள் ஸீதா பிராட்டியையும் இங்ஙனே தூஷிக்கலாம். அவள் காட்டுக்குப் புறப்படுவதற்கு முன்னே "ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்" என்று சொல்லி பகவதபசாரப்பட்டதற்கும், பிறகு வனத்தில் மாரீசமாயாம்ருகாக்ரோசனத்தில் இளைய பெருமாளையும் பாதாழ்வானையும் கர்ண கடோரமாக தூஷித்து பாகவதாபசாரப்பட்டதற்கும் பயனாகவே யன்றோ உடனே சிறையிருக்க நேர்ந்ததென்று சொல்லுவாரையுங் காண்கிறோமன்றோ. இப்படிப்பட்டவர்களுக்கும் ஸத்கதியே யொழிய துர்க்கதிகிடையாது. ஏனென்னில், ஏதோ வொரு காரணார்த்தமாகவும் அவதார புருஷர்களின் திருநாமத்தையும் திவ்யசரித்திரத்தையும் இடைவீடின்றி இரவும் பகலும் சிந்தனை செய்யும் பாக்கியம் பெற்றிருத்தலால். ... *

---

## பெரிய திருமலைநம்பியும் பெரியவாச்சான் பிள்ளையும்

பெரிய என்கிற விசேஷணம் நமது ஸம்ப்ரதாயத்தில் சில திருநாமங்களுக்கே யல்லது எல்லாத் திருநாமங்களுக்கும் வழங்கப்பட்டிருக்கவில்லை. இந்த விசேஷணம் ஒரு காரணத்தையிட்டு நேர்ந்ததேயன்றி நிஷ்காரணமாக நேர்ந்ததென்று ஒருவரும் சொல்லமுடியாது. பெரியாழ்வாரென்கிற திருநாமத்தில் பெரிய என்ற விசேஷணத்தின் காரணம் மணவாளமாமுனிகள் போல்வாரால் க்ரந்தஸ்தமாக்கப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்ட உலகறிந்த காரணம் தெரியாத விடங்களில் [அதாவது பூருவர்களின் க்ரந்தங்களினால் தெரிந்துகொள்ளமுடியாத விடங்களில்] பெரிய என்கிற விசேஷணத்தை ஸர்வாத்மநா நிரர்த்தகமாக்கி விடமுடியாது. அது நியாயத்திற்கு ஒத்ததன்று. ஏதோ வொரு கௌரவத்தையிட்டே அந்தப் பெரிய விசேஷணம் விளைந்திருக்கின்றதென்பதை யாவருமிசைந்து தீரவேண்டும். கள்ளிச் செடியை மஹாவ்ருக்ஷ மென்பது போலவேதான் பெரிய திருமலை நம்பி பெரியவாச்சான்பிள்ளை போல்வார்க்குப் பெரிய வென்கிற வ்யவஹாரம்—என்று ஸ்ரீ வைஷ்ணவர்களில் யாரும் சொல்லத்துணியார்கள். ஆகவே ஒரு சிறப்புத் தோற்றப் பெரிய வென்கிற விசேஷணத்தையிட்டே வ்யவஹரிக்கப்பட்டு வந்த பெரியவாச்சான்பிள்ளை போல்வாரான பேராசிரியர்களை, அவரவர்களின் கௌரவத்தை நன்கறிந்தவரும் வெகு ஜாகரூகராய் சப்த ப்ரயோகங்களைச் செய்தருள்பவருமான மணவாளமாமுனிகள் பெரிய வென்கிற விசேஷணத்தைவிட்டு ஒருகாலும் எழுதமாட்டார்.

திருமலைநம்பி யென்று ஒரு வ்யக்தியும் பெரிய திருமலை நம்பி யென்று வேறொரு வ்யக்தியும் இருந்ததுண்டா? என்கிற விசாரமே அப்ரஸக்தம். அநாவச்யகம். ஒரு வ்யக்தியே யொழிய இரண்டு வ்யக்தி கிடையாது. இதைப்பற்றி ஆராய்ச்சி செய்பவர்கள் இரண்டு விதமாகத் திருவுள்ளம்பற்றுகிறார்கள். பெரிய என்பது திருமலைக்கு விசேஷணம் என்பர் சிலர்; அது நம்பிக்கே விசேஷணம் என்பர் சிலர். இரண்டிலும் உபபத்திகாண்கிறோம். ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் இளையாழ்வார் வைபவத்தில் அவருடைய திருமலை ப்ரயாண ப்ரஸ்தாவத்தில் "திருக்கச்சிநம்பியுடனே அடியேன் பெரிய திருமலைக்கு விடை கொள்ளுகிறேனென்று விண்ணப்பஞ் செய்ய" என்றிருப்பதைக் காண்கிறோம். மேலே 'திருவேங்கடமுடையான் தீர்த்த ப்ரஸாதங்கொண்டு பெரிய திருமலைநம்பி எதிரே யெழுந்தருளி ப்ரஸாதித்தருள" என்றுகாண்கிறோம். இளையாழ்வார் வைபவோபக்ரமத்தின் முதல் வாக்யத்திலேயே பெரியதிருமலைநம்பி யென்றுள்ளது. பெரியநம்பியைச் சிலவிடங்களில் நம்பியென்றே எழுதுவதுபோல இவரையும் சிலவிடங்களில் திருமலைநம்பி யென்றெழுதியிருந்தால் அதையொரு விஷயமாகவெடுத்துக்காட்டிப் பயனில்லை. நாச்சியார் திருமொழி வியாக்கியானத்தில் (10—8ல்) அப்படியுமுள்ளது.

திருவாய்மொழியில் * நீயலையே சிறுபூவாய்—இனியுனது வாயலகிலின்னடிசில் வைப்பாரை நாடாயே" என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்யானத்திலும் ஈட்டிலும் நம்பியிணைநிற்றயமுள்ளது. அங்குப் பெரியதிருமலைநம்பியென்றே ஸ்ரீஸூக்தியுள்ளது. ஆசார்யஹ்ருதயத்தில் * ம்லேச்சனும் பக்தனானால் * இத்யாதி சூர்ணையில் "ஐவரில் நால்வரில் மூவரில் முற்பட்டவர்கள்" என்றவிடத்து வியாக்யானத்தில் பெரியதிருமலைநம்பியென்றே மணவாளமாமுனிகளுமருளிச் செய்துள்ளார். சிறிய திருமலைநம்பியொருவரிருந்து அவரை வ்யாவர்த்திக்கைக்காகப் பெரிய என்று விசேஷணமிட்டதன்று. * பிதாமஹஸ்யாபி பிதாமஹாய * என்கிற இவருடைய தனியனில் "ஸ்ரீபாஷ்யகாரதேசிகாய" என்னாமல் "ஸ்ரீபாஷ்யகார—உத்தம தேசிகாய" என்கையாலே அதற்குச் சேரவே பெரியதிருமலைநம்பி யென்றது என்று கொள்ளலாம். அது எப்படியாயினுமாகுக. மணவாளமாமுனிகள் அவரைத் திருமலைநம்பியென்று எழுதினதில்லை; பெரிய திருமலைநம்பி யென்றே யெழுதியுள்ளார். அவரவர்களுக்கு ஏற்பட்டுள்ள கௌரவத்தை அணுவளவும் குறைப்பவரல்லர் மாமுனிகள். பெரியவாச்சான்பிள்ளை திருநாமத்தில் பெரிய வென்பது மிகுந்த கௌரவச் சொல்லாக ஏற்பட்டிருக்க அதைத் தள்ளிவிட்டு ஆச்சான்பிள்ளையென்றே இருபது தடவைகளிலுமெழுதினாரென்றால் இந்த மஹாபசாரத்தை மாமுனிகளா ஏற்றுக்கொள்பவர்.

பெரியதிருவடியான கருத்மானைத் திருவடியென்றே சில ஆசார்யர்கள் எழுதினாலும், மணவாளமாமுனிகள் சோம்பாது பெரியதிருவடிநாயனார் என்றே எழுதியருளுகிறார். ஸ்ரீவசநபூஷணத்தில் "இவ்விடத்தில் வைநதேயவ்ருத்தாந்தத்தையும்" என்ற சூர்ணையின் வியாக்கியானத்தில் பெரியதிருவடிநாயனாரென்றே அஸக்ருத் எழுதியருளியிருப்பதைக் காணலாம். இப்படி அரிய பெரிய விரதமுள்ள மாமுனிகள் அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் சிறியாரோடு பெரியாரோடு வாசியற யாவரும் பெரியவாச்சான் பிள்ளை யென்றே போற்றிவருமாசார்ய சிகாமணியை ஆச்சான்பிள்ளையென்று அவலீலையாக எழுதிப்போந்தாரென்றால் இதற்குத் தலைதுலுக்குமவர்கள் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளைக் கனவிலுங் காணாதவர்களாகவேயிருக்கவேண்டும். ... .... *

# திருவாய்மொழிப்பிள்ளை வியாக்கியான ஆராய்ச்சி.

(கீழ் 10-வது பக்கத்தின் தொடர்ச்சி.)

பெரியாழ்வார் திருமொழிக்குத் திருவாய்மொழிப்பிள்ளை யருளிச்செய்ததாக அச்சிடப்பட்டிருக்கின்ற ஸ்வாபதேச வியாக்கியானம் மணவாளமாமுனிகளின் ஆசார்யரான பிள்ளை பணித்ததன்று என்பதைப் பல காரணங்களைக் கொண்டு நிரூபிக்கிறோமிங்கு.

1. உபதேசரத்தின மாலையில் மணவாளமாமுனிகள் இதை ப்ரஸ்தாவிக்கவேண்டிய அவச்யமிருந்தும் சிறிதும் ப்ரஸ்தாவிக்கவில்லையென்பது முக்கியமான காரணம். இதைக் காட்டிலும் மிக முக்கியமான வேறு பல காரணங்களும் நிரூபிக்கிறோம்.

2. மணவாளமாமுனிகள் போற்றும் ஆசார்யரான இவர் மஹாஜ்ஞான நிதியாக இருந்திருக்கவேணுமே. இவருடையதாகச் சொல்லப்படுகிற வியாக்கியானத்தில் விவேகிகளும் பிராமாணிகர்களும் இசையத்தகாதவையும் வெறுக்கத் தக்கவையுமான விஷயங்களன்றோ மலிந்துள்ளன. அவற்றுள் சில காட்டுகின்றோமீங்கு. (1) *உய்யவுலகுபதிகத்தில் "ஆடுக செங்கீரை" என்று செங்கீரையாட்டம் சொல்லப்பட்டுள்ளது; இதைப் பற்றி மாமுனிகள் தமது வியாக்கியானத்தில்—"செங்கீரையாவது தாய்மார்முதலானோர் பிள்ளைகளைத் தாங்களே அசைத்து ஆடுவிப்பதொரு ந்ருத்த விசேஷம்" என்று மிகவும் பொருத்தமாக அருளிச் செய்துள்ளார். விவாதாஸ்பதமான வியாக்கியானத்திலோ வென்னில், "பிள்ளைகளுடைய ந்ருத்த விசேஷங்களிலே செங்கீரை யென்று ஒரு துறையுண்டு தமிழர் சொல்லுவது" என்றெழுதிவிட்டு உடனே "கீர் என்று பாட்டாய் அதுக்கு நிறம் சிவப்பாகி, பாட்டுக்குத் தகுதியாக ஆடு என்று நியமிக்கிறாளாகவுமாம்" என்றெழுதியுள்ளது. ஆசார்ய பீடத்தை அலங்கரிப்பவர்கள் எழுதக்கூடியதா இது ?. (2.) *ஆற்றிலிருந்து பாசுர வியாக்கியான முடிவில்—"இன்று முற்றும் என்ற வித்தால் சரமாதிகாரம் நாசத்தை நிரூபித்தால் உஜ்ஜீவனத்திலே நிரூபித்.ாலொழிய நடுவு நிலையில்லை யென்று நம்பி அருளிச் செய்த வார்த்தையும் தோற்றுகிறது. அதாவது பர்வக்ரமமாக நசிக்கிறா னென்னுதல்; உஜ்ஜீவிக்கிறானென்னுதல் செய்யாதென்றபடி. தன்னுள்கலவாததெப்பொருளும் தானில்லையே." என்றுள்ளது. இப்படிப்பட்ட தலைகாலில்லாத வாக்கியங்கள் இந்த வியாக்கியானத்தில் பல நூற்றுக் கணக்காகவுள்ளன. இதெல்லாம் ஸ்வாபதேசப் பொருள்களாம். (நிரூபித்-தல் என்பது நிரூபித்தால் என்று அச்சுப்பிழையாக விழுந்திருக்கலாம்.) எந்த நம்பி அருளிச் செய்த வார்த்தையோ இது ? சப்தார்த்தமென்னோ, தாத்பர்யார்த்த மென்னோ ? விரகர்கள் விமர்சிக்கவேணும். (3) *ஒன்று மறிவொன்றில்லாத* (3-8-2.) என்கிற பாசுரத்தில் "கோபாலர்தங்கள் கன்றுகால் மாறுமா போலே" என்று மூலமுள்ளது. இங்கு மாமுனிகளின் வியாக்கியானம்—'கோபாலர் தங்கள் என்றது கோபாலர் தாங்களென்றபடி ......கன்றுகால் மாறுகையாவது தீதாயிருந்துள்ள தங்களுடைய கன்றுகளை உங்களதென்று பிறர்க்குக் காட்டி, நல்லதாயிருந்துள்ள அவர்களுடைய கன்றுகளைத் தங்களதாக்கிக் கொள்ளுகையும், நல்வழியாய்க் கண்ணுக்கு நன்றாயிருக்கும் கன்றுகளை உடையவர்களறியாமல் களவிலே நிலை பேர்த்துக் கொண்டு போகையுமிறே: இதில் பிற்பட்டதே இவ்விடத்துக்குச் சேருவது" என்பதாம். மாமுனிகள் இப்பொருளை ஸ்வாசார்யரான திருவாய்மொழிப்பிள்ளை பக்கலில் தானே கேட்டிருக்கவேண்டும். அவருடையதாகச் சொல்லும் வியாக்கியானத்திலே யுள்ளதாவது—"(தங்கள் கன்றுகால் மாறுமா போலே) தங்கள் கன்றுகள் விளைவதறியாதேயிருந்ததேயாகிலும் முன்னடியிலே பின்னடியிட்டு இரண்டு காலாலே நடக்தாப் போலேயிறே யிருப்பது; அப்படியே படிகடந்து

புறப்படாமல் க்ருஹத்திலே யிருந்த கன்யகையைக் கொண்டு போனபடி" என்று. மூலத்திற்கும் இவ்வர்த்தத்திற்கும் ஸம்பந்த லேசமாவது உண்டோ? இப்படிப்பட்ட அஸம்பத்த லேகனங்கள் பல பல.

3. விவாதாஸ்பதமான வியாக்யானத்தில் ஆங்காங்கு பாடாந்தரங்கள் கொள்ளப் பட்டிருக்கின்றன. அவை திருவாய்மொழிப்பிள்ளை காட்டியவையாகில் ப்ராமாணிக மென்று மாமுனிகள் தாமும் அப்பாடங்களையும் தழுவியிருப்பரன்றே. இராமாநுச நூற்றந்தாதியுரையில் எத்தனை பாடாந்தரங்கள் காட்டியுள்ளார் மாமுனிகள்; தாமறிந்த பாடங்களை அவர் விடுவதில்லையன்றே. இப்படிப்பட்டவவர் ஸ்வாசார்யர் காட்டின பாடத்தை விடுவரோ? ஒருகாலும் விடார். (3-7-7.) * பேசவுந்தரியாத பெண்மையிற்பேதையேன் * என்று கொண்டு மாமுனிகளால் வெகு அழகாக வியாக்யானம் செய்யப்பட்டுளது. இங்கு விவாத வியாக்யானத்தில் இரண்டு வேறுபாடங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. பெண்மயில் என்று ஒரு பாடமாம்; 'பேதை என்பேதை' என்று ஒரு பாடமாம். இப்பாடங்களை மாமுனிகள் நெஞ்சிலும் நினைத்தவரல்லர். அது தகுதியோ? தகுதிதான்; ஆசார்ய பீடம் வஹித்த ஆசிரியர் காட்டின பாடமல்லாமையாலே. இந்த வகுப்பில் காட்டவேண்டியவை இன்னமும் பலவுண்டு.

4. விவாதக்ரஸ்தமான இந்த வியாக்கியானத்திலே எண்ணிறந்த ஐதிஹ்யங்கள் எழுதப்பட்டுள்ளன. அவை திருவாய்மொழிப்பிள்ளை பணித்தவையாயிருந்தால் அவற்றை மணவாள மாமுனிகள் தமது வியாக்கியானத்திலும் எடுத்துக்காட்டியே யிருப்பர். வெவ்வேறிடங்களில் பெரியவாச்சான்பிள்ளை போல்வார் அருளிச் செய்துள்ள ஐதிஹ்யங்களை மாமுனிகள் தமது வியாக்கியானத்தில் "என்று ப்ரஸித்தமிறே" என்று எடுத்துக்காட்டியேயுள்ளார். அப்படி எடுத்துக் காட்டுமவர் இவற்றை விட்டிருப்பாரோவென்று விமர்சிக்க வேண்டும். * காறைபூணும் கண்ணாடி காணும் * (3-7-8) என்ற பாட்டின் வியாக்கியானத்தில்—"இவள்தான் அமுதுபடி திருத்துவது சாத்துப்படி திருத்துவதாகா நின்றாள் என்று பிள்ளை அருளிச்செய்வர்" என்றுள்ளது. இது இந்த விடந்தவிர வேறிடத்தில் காணமுடியாதது. இங்ஙனே பல ஐதிஹ்யங்கள் எழுதுகிறார். இவற்றுள் ஒன்றையாவது மாமுனிகள் ஆதரிக்கிறாரா வென்று பாருங்கள். அவரெழுதின ஐதிஹ்யங்களை யெல்லாம் இவருமெழுத வேணுமென்று என்ன நிர்ப்பந்தம்? என்று எளிதாக விடை கூறிவிடலாம். மேலே * நாவகாரியம் சொல்லிலாதவர் * என்கிற திருக்கோட்டியூர்ப் பதிகத்தின் வியாக்கியானம் முழுவதும் ஆராயத்தக்கது. அங்கு இரண்டு வியாக்கியானங்களும் பெரும்பாலும் ஒரேவிதமான வாக்யஸந்நிவேசமாயே அமைந்துள்ளன. அதில் 1, 7, 9 பாசுரங்களின் வியாக்கியானத்திலே பத்தெட்டு ஐதிஹ்யங்களுக்கு மேலுள்ளன. அவையும் இரண்டு வியாக்கியானங்களிலும் ஒருபடிப்பட்டே யிருக்கின்றன. அங்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம் செல்லரிக்காமல் மாமுனிகளுக்குக் கிடைத்ததாகவும் அதிலுள்ள கௌரவத்தாலே அதை அப்படியே யெடுத்துக்கொண்டதாகவும் அரும்பதவுரைகாரர் எழுதியுள்ளார். அஃது உண்மையாகவே யிருக்கலாம். அதிலுள்ள ஐதிஹ்யங்களை விடாமல் எடுத்துக் கொண்டருளின மாமுனிகள் விவாத வியாக்கியானத்திலுள்ள முப்பது நாற்பது ஐதிஹ்யங்களுள் ஒன்றையும் தொட்டிலரென்றால் இதற்கென்ன காரணமென்று விமர்சிக்க வேண்டாமோ? திருவாய்மொழிப்பிள்ளை ஆப்தரல்லர் என்று மாமுனிகளின் திருவுள்ளமா?

5. மேலேயெடுத்துக் காட்டிய * காறைபூணும் பாசுர வியாக்கியானத்தில் "பிள்ளையருளிச் செய்வர்" என்றிருக்கிறதே; எந்தப் பிள்ளையருளிச் செய்வரென்பது தெரியுமோ?

மாமுனிகள் தம்முடைய வியாக்கியானத்தில் பிள்ளை யென்றெழுதியுள்ள விடங்களுக்குத் திருவாய்மொழிப்பிள்ளை யென்று பொருள் கொள்வது ஸம்ப்ரதாயம். அரும்பதவுரைகாரரும் அப்படியே யெழுதியுள்ளார். அந்தத் திருவாய்மொழிப்பிள்ளையின் வாக்கில் பிள்ளை யென்று வந்தால் பிள்ளைலோகாசார்யரையே கொள்ளவடுக்கும். ஸ்ரீ வசநபூஷண வியாக்கியான அவதாரிகையில் மாமுனிகளும் பலகாலும் பிள்ளை யென்றே (லோகாசார்யரை) நிர்தேசித்தருளுகிறார். திருவாய்மொழிப்பிள்ளை ஸாக்ஷாத் பிள்ளைலோகாசார்யருடைய திருவடிபூராகையாலே அவர் ஸ்வாசார்யரைக் குறிக்கவேண்டிவந்தால் எவ்விதமாகக் குறிக்கவேணுமென்பதை ஸம்ப்ரதாயஜ்ஞர்கள் அறிவர்கள். விவாத வியாக்கியானத்தில் * பின்னைமணாளனை * என்னும் பதிகத்தின் ப்ரவேசத்தில் "என்று பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்கையாலும்" என்றுள்ளது. மேலே (4-8-3) * மருமகன் தன் சந்ததியை * என்ற பாட்டின் வியாக்கியானத்திலும் "பெரிய வடக்கில் திருவீதிப்பிள்ளை தம்மகனுரான லோகாசார்யரை" என்றுள்ளது. இப்படி ஸாக்ஷாச்சிஷ்யர்கள் எழுதமாட்டார்கள். மேலும் * பின்னைமணாளன் ப்ரவேசத்தில் "என்று பிள்ளை லோகாசார்யரருளிச் செய்கையாலும்" என்ற வாக்யத்தின் முன்னே ஸ்ரீவசநபூஷண சூர்ணை யொன்று ரஸாபாஸமாக எடுத்தாளப்பட்டிருக்கிறது. [இது அச்சுப்பிழை யென்று சொல்லவே முடியாது.] ஸ்ரீவசநபூஷணத்தை ஸதாசார்ய ஸந்நிதியிலே அதிகரித்தவர் எழுதின பங்க்தியன்று அது.

6. இங்ஙனே ப்ராமாணிகர்கள் உகக்குமாறு எடுத்துக்காட்டக்கூடிய விஷயங்கள் மலையுங் கடலும்போலுள்ளன. காட்டின இவ்வளவே போதும். இவ்வளவும் கண்ட பெரியார்களும் அது திருவாய்மொழிப்பிள்ளை பணித்த வியாக்கியானந்தானென்று முழுமனமாகக் கொள்வர்களாகில் அடியேனும் அப்படியே கொள்ளத் தட்டில்லை. இந்த வியாக்கியானத்தை மணவாளமாமுனிகளும் கண்டு வைத்து, அசடுவழியுமிந்த வியாக்யையை ஸ்வாசார்யர் பணித்ததாக வெளியிட்டுக்கொள்ளக் கூசியே உபதேசரத்தினமாலையில் இதை ஸ்மரியாமலே விட்டிட்டு, இது உள்ளடங்கும்படி தாம் வேறு வியாக்யானம் செய்தருளினர்—என்று இப்பரமார்த்தமாவது வெளியாகித் தீரும்.

7. இது திருவாய்மொழிப்பிள்ளை ஸாதித்ததேயென்று ஸ்தாபிக்கப் பாடுபடுகின்றவர்களுக்கு இதனால் ஸ்வல்ப லாபமுமில்லையென்பதையும் இனி நிரூபிக்கிறோம். இதில் * மிக்க பெரும்புகழ் * வட்டு நடுவே * காயுநீர்புக்கு * ஆலத்திலையான் * ஒருமகள் தன்னை * சித்திர கூடத்திருப்ப * என்கிற பாட்டுக்களின் வியாக்யானத்திலும், * என்னுதன் தேவி ப்ரவேசத்திலும் ஆச்சான்பிள்ளையருளிச்செய்வர் என்கிற ப்ரஸ்தாவம் வந்துள்ளது அவ்வாச்சான் பிள்ளை இன்னாரென்பது அதுதன்னிலேயே அதிஸ்புடமாக அறியக்கிடக்கின்றது; * காறை பூணும் கண்ணாடிகாணும் * (3-7-8) என்ற பாட்டின் அவதாரிகையிலே "இம்மணக்கோலம் பிணக்கோலமாகிறதென்றிறே இவள் நினைத்திருப்பதென்று நாலூர்பிள்ளையருளிச் செய்தாராக ஆச்சான்பிள்ளையருளிச்செய்வர்" என்றுள்ளது. நாலூர்பிள்ளையென்பவர் இன்னாரென்பதை மாமுனிகள் உபதேசரத்தினமாலையில் "ஆங்கவர்பால்பெற்ற" என்ற பாசுரத்தில் விளக்கினதுமல்லாமல் பெரியாழ்வார் திருமொழி வியாக்யானத்திலும் (3-9-4ல்) "நம்பிள்ளை ஸ்ரீபாதத்திலே கேட்ட சிறியாழ்வான்பிள்ளை குமாரர் பக்கலிலே கேட்ட நாலூர்பிள்ளை" என்று ப்ரவரம் எழுதி நன்கு விளக்கியுள்ளார். அந்த நாலூர்பிள்ளையின் திருக்குமாரர் அவ்வாச்சான் பிள்ளைஎன்றும் அவ்விடத்திலேயே அருளியுள்ளார். பெரியவாச்சான்பிள்ளைக்கு மிகவும் பிற்பட்டவரான நாலூர்பிள்ளையின் திருக்குமாரரும் சிஷ்யருமான ஆச்சான்பிள்ளையைப்பற்றியே அந்த வியாக்கியானம் முழுவதிலும் ப்ரஸ்தாவமுள்ளதாகத் தேறுகின்றது. உபதேசரத்தினமாலை வியாக்கியானத் தமிழ்ப் பதிப்பில் பிள்ளை யென்றதும் இசையத்தக்கபாடமே.

# கடிதங்கள்—தொடர்ச்சி.

## ஸ்ரீமான். உவே. C. S. பார்த்தஸாரதிஐயங்கார் B.A., B.L., (புதுடில்லி) அவர்களின் நிருபம்.

14—8—49-ல் வெளிவந்த ஹிண்டு பத்ரிகையில் 1. ஆச்சான்பிள்ளையஷ்டாத்யாயி, 2. அஷ்டாத்யாயியணிகலன். 3. ஷோடசாத்யாயி ஆகிய மூன்று புத்தகங்களைப் பற்றியும் நிஷ்பக்ஷபாதமான விமர்சனம் வெளிவந்திருப்பதைப் படித்ததனாலுண்டான ஆனந்தத்தைத் தமிழுலகுக்கெல்லாம் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். பரந்த ரஹஸ்யம் விஷயமான சர்ச்சைக்கு முற்றுப்புள்ளி வைக்க சமநிலைவஹிக்கும் அறிஞர் ஒருவரின் நிஷ்பக்ஷபாதமான முடிவுவேண்டுமென்று பலர்க்கிருந்த அவா இப்போது பூர்த்தியாகிவிட்டது. மதிப்புவாய்ந்ததும் அசைக்கவொண்ணாததுமான முடிவன்றோ ஹிண்டுவில் வெளிவந்திருப்பது.

> "வார்த்தைகளின் அணி, எழுத்தமைப்பு, புராதன சமகால நூல்களினின்றும் கையாண்ட தொகுதிகள் போன்ற அகச்சான்றுகளும் ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் முடிவையேதான் தருகின்றன."

ஸ்வாமி ஸாதித்ததுபோல ஸத்யமே ஜயமடைந்துவிட்டது. உண்மையே வெற்றிக்கொடி நாட்டிவிட்டது. எட்டுத்திக்கிலும் ப்ரஸித்தி பெற்ற ஹிண்டு பத்ரிகையே இதை உலகத்தாருக்கு ஜெய பேரிகையுடன் உத்கோஷித்துள்ளது. தவிர ஸ்ரீஸ்வாமியின் முறை நவீன கால ஆராய்ச்சியாளர்கள் கையாளும் முறையைத் தழுவியிருக்கின்றதென்றும் புகழ்ந்திருப்பது பாராட்டத்தக்கது. ஸுதர்சன பத்திராதிபர் இனியும் தமது சுபாவத்தைவிடாமல் வீணை அவதூறுகளை யெழுதி வெளியிட்டுக் கொண்டிருந்தால் அதை உலகம் பொருள் படுத்த அவசியமே கிடையாது. "அவருடைய புத்தகம் வெற்றிபெறுததற்குக் காரணம் அவர் விஷயத்திற்கு அடியோடு சம்பந்தமில்லாதவற்றைக் கிளப்பிவிட்டிருப்பதுதான்" என்று ஹிண்டு பத்ரிகை தெளிவிக்கின்றது. ஆகவே அவர் இனியாவது காடுபாயும் ஜால வித்தை பயனற்றதென்று உணர்வாரா?

ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் தலைமைக் காரியதர்சியாகிய (அட்வொகேட்) ஸ்ரீ. முஸலப்ப ரெட்டியாரவர்கள் ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயியின் தத்துவங்களையெல்லாம் ஸ்ரீ ஸ்வாமியிடத்தில் நேராகக் கேட்டறிந்து ஆங்கிலத்தில் விரிவாக எழுதி வெளியிட்டிருக்கும் வியாஸத்தை ஹிண்டு பத்ரிகை மிகவும் புகழ்ந்து இதுவே ஸ்வாமியின் வாதங்களை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்குகின்றதென்று சிலாகித்துள்ளது. அஷ்டாத்யாயியணிகலனில் வெளிவந்துள்ள பல வித்வான்களின் அபிப்ராயங்களையும் ஆனந்தமாக எடுத்துக்காட்டி முடித்திருக்கின்றது.

"ஸத்யமேவ விஜயீபவதி."

---

## ஸ்ரீமான் A. ராமாநுஜாசாரி, B.A., புதுடில்லி. அவர்களின் நிருபம் (14—8—49)

இன்று ஸ்ரீமத். C. S. பார்த்தசாரதி ஐயங்கார் B. A., B. L., ஸ்வாமிகளைச் சந்திக்க நேர்ந்தபோது, ஆச்சான்பிள்ளை விவாதத்தை முடிவுகட்டி ஹிண்டு பத்திரிகை வெளியிட்டிருந்த நீண்ட வியாஸம் பற்றி வார்த்தையாடிக் களிக்க நேர்ந்தது. அதைத்தழுவி ஸ்ரீ C. S. P. ஸ்வாமிகள் ஸ்ரீ ராமாநுஜனில் பிரசுரம் செய்ய அடியேனிடம் எழுதிக்கொடுத்த சிறு வியாஸமும் உலகுக்கு அமுதமான ஊணாகுமென்று நம்புகிறேன். உலகப்பிரஸித்தி

பெற்ற ஷை ஹிண்டு பத்திரிகையில் வெளிவந்துள்ள நிஷ்பக்ஷபாதமான—ஆணித்தரமான முடிவுக்குப்பிறகு இந்த சர்ச்சையை மேன்மேலும் வளர்த்துச் செல்ல நியாயமில்லை யென்கிற வுணர்ச்சியை ஸுதர்சன பத்திராதிபர்க்கு எம்பெருமான் அருள் புரிவாராக.

---

## பாம்பே நகரில்வாழும் ஸ்ரீ உ. வே. ஸம்ப்ரதாயப்ரவசன துரந்தர. வி. வி. ஐயங்கார் ஸ்வாமி 2-7-49 தேதி முதலாக விடுத்த பல ஸ்ரீமுகங்களிலுள்ள அமுத மொழிகளில் மிகவும் ஸாரமானவை—

"ஷோடசாத்யாயியை நான் இன்னமும் பார்க்கவில்லை. பார்த்தாலும் அபிப்ராயம் கொடுக்கமாட்டேன்." "புத்தூருக்கு நேரில் விடைகொண்டிருந்தபோது கீழ்க்கண்ட விஷயங்கள் தெரிவித்தேன்; அஷ்டாத்யாயியணிகலன் அடியேன் ஸேவிக்கப்பெறவில்லை. (அது கிடைப்பதற்கு முன்னமே பாம்பேவிட்டுப் புறப்பட்டுவிட்டேன்.) அணிகலனில் கண்ட பங்க்திகள் அடியேனுடையதுதான். ஒன்றிரண்டு சொற்களைப்பற்றிச் சங்கிக்கிறேன். ஆக்ரஹம் என்னும் பதம் அடியேன் சாதாரணமாகக் கையாள்வதில்லை; ஒருகால் எழுதியிருக்கலாம்." "ஷோடசாத்யாயிக்கு அபிப்ராயம் கொடுக்கமாட்டேனென்று சொல்லியும் அடியேன் பெயர் சுதர்சனத்தில் வெளிவந்ததாகக் கேள்விப்படுகிறேன், இது அடியேன் பாபமே." "லோகோபகாரமான பணியில் தலையிட்டு பாகவத தூஷணைகளில் தலைக்கட்டினது சோசநீயமே."

## தென்திருப்பேரை ஸ்ரீ. உ. வே. K. ராமசந்திராசார்ய ஸ்வாமியின் நான்கு ஸ்ரீமுகங்களின் ஸாரமான வார்த்தைகள்.

"அடியேன் ஸர்வதாரிஸு சித்திரை மாதப்பிறப்பன்று காஞ்சீபுரம் விடை கொண்டு தேவரீரை நேரில் சேவித்தபோதும், பிறகு நம்பிள்ளை திருநக்ஷத்ர மஹோத்ஸவத்தில் விடைகொண்டிருந்தபோதும் புத்தூர் வக்கீலுறவு ஸ்வாமிக்கு வேண்டாமென்று அடியேன் வற்புறுத்திச் சொன்னதை ஸ்வாமி கவனிக்கவில்லையே யென்று அப்போதேயறிந்து வருந்தினேன்." "திருக்கோட்டியூர் தங்கமையங்காரும் பாம்பே. வீ. வி. ஐயங்காரும் அபிப்ராயத்தை மாற்றிக் கொண்டுவிட்டதாகவும் நீயும் அப்படி மாற்றிக்கொள்ள வேண்டுமென்றும் வற்புறுத்தி யெழுதினர். அதற்கு அடியேன் யாதொரு பதிலும் எழுதவில்லை. ஸ்வாமி திருவடிகளிலும் ஸ்வாமியின் திவ்ய ஸ்ரீ ஸூக்திகளிலும் அடியேனுக்குள்ள ப்ரதிபத்தி எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் மாறாது. இரவும் பகலும் ஸ்வாமியின் ஸ்ரீ ஸூக்திகளையே உணவாகக் கொண்டு போது போக்குகிறவன் அடியேன்." "அவருக்கு இங்கிலீஷில் ஒரு ப்ரைவேட் கார்டு எழுதியிருந்தேன். அதில் – உம்முடைய 23—3—49 லெட்டரிலிருந்து உமக்கும் ஸ்வாமிக்கும் பரந்த ரஹஸ்யப்ரசுரவிஷயமாய் நடந்த ஸங்கதிகள் நேர்மையாய் நடந்ததாக இல்லையென்று தெரிகிறதென்றும், இனிமேல்பட ஸ்வாமியுடன் புஸ்தக விஷய்மாக நீர் கலந்துகொள்ள வேண்டாமென்றும், அதற்காக கண்டபடி அனாவச்யகமாக உம்முடைய பத்ரிகைகளில் ஸ்வாமியை நிந்திக்கவேண்டாமென்றும் எழுதியிருந்தேன்.' இதை விபரீதமாக்கி அவர் வெளியிட்டிருப்பதாகத் தெரிகிறது. அந்த பத்ரிகை என்னிடம் வரவுமில்லை. இந்த சனி எப்படியாவது போகட்டும். இந்த சர்ச்சையை ஸ்வாமி மறந்துவிட வேணும். இந்த மஹாபசாரத்தில் அடியேனுக்கும் ஸம்பந்த முள்ளதுபோல் சிலர் நினைக்க நேர்ந்ததற்கு மிகவும் சோகித்து இதற்கு ப்ராயச்சித்தமாக இன்று (11—8—46) நூற்று நான்கு ரூபாய் M. O. செய்திருக்கிறேன். இதை ரூபாயாகமாற்றி நம்பிள்ளை திருவடிகளிலும் வடக்குத்திருவீதிப்பிள்ளை பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளிலும் மதுரபதார்த்த நிவேதனத்துடன் ஸமர்ப்பித்துக் கைங்கர்யத்தில் விநியோகிக்கும்படி ப்ரார்த்திக்கிறேன்."

---

# ஆச்சான்பிள்ளை நிர்ணய ஸாரஸங்க்ரஹம்.

ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி, ஸ்ரீ வைஷ்ணவ மஹாநிதி, மாமுனிவனருள் வெற்றி முதலிய வெளியீடுகளில் தேறின விஷயம் ஸாரமாக இங்குத் தெரிவிக்கப்படுகின்றது. பெரிய வாச்சான்பிள்ளை வேறு வ்யக்தி ஆச்சான்பிள்ளை வேறுவ்யக்தி யென்பதும், ஆச்சான்பிள்ளையே பரந்தரஹஸ்யமருளிச் செய்தவரென்பதும் முக்யமான பத்து ஆதாரங்களினால் நிலை நிற்கும். பரந்தரஹஸ்ய மென்று ஒன்று இருக்கின்றதென்பது மணவாள மாமுனிகளின் வியாக்யான ஸ்ரீஸூக்திகளினாலல்லது வேறு ஒருவருடைய வாக்கினாலும் நாம் விசேஷித்து அறிந்துகொள்ள முடியாமலிருக்கிறது; ஆகவே இவ்விஷயத்தில் மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளே நமக்குத் தஞ்சம். பரந்தரஹஸ்ய மென்று ப்ரஸ்தாவமும் செய்யாத இதர ஆசார்யர்களின் வாக்கிலே காடுபாய வேண்டிய அவச்யம் சிறிதுமில்லை. 10 ஆதாரங்களாவன;—

1. உபதேச ரத்தினமாலையில்—எம்பெருமானார் திருக்குருகைப் பிரான்பிள்ளான் பிள்ளைலோகாசார்யர் அழகிய மணவாளச்சீயர் என்னுமிவ்வாசிரியர்களை அஸக்ருத் நிர்தேசிக்கவேண்டினபோது வெவ்வேறு வாசகங்களினால் நிர்தேசித்திருப்பதுபோல பெரியவாச்சான்பிள்ளையை வெவ்வேறு வாசகங்களினால் நிர்தேசியாமல் மூன்றுபாசுரங்களிலும் ஒரேவிதமாகவே [பெரியவாச்சான் பிள்ளையென்றே] பேசியிருப்பதால் அவ்வாசிரியர்க்குப் பெரிய என்கிற அடைமொழியை மாமுனிகள் ஒருபோதும் விடமாட்டாதவர் என்கிற வுறுதி தேறுகின்றது. செய்யுளில் இப்படியருளிச் செய்த மாமுனிகள் ரஹஸ்ய வ்யாக்யானங்களில் ஆதியிலிருந்தே ஆச்சான்பிள்ளை ஆச்சான்பிள்ளை யென்றே இருபது தடவைகளுக்குமேல் எழுதி யிருக்கிறபடியால் இருவரும் ஒரே வ்யக்தியாக இருக்க நியாயமில்லை.

2. தத்வத்ரயம் **103**-ஆம் சூர்ணையின் வியாக்கியானத்தில் – ஆச்சான் பிள்ளையும் வாதிகேஸரி ஜீயரும் ஆவரண க்ரமம் சொன்னார்கள், பிள்ளைலோகாசார்யரும் பெரியவாச்சான்பிள்ளையும் அது சொல்லவில்லை என்னும் விஷயத்தை விரிவாக நிரூபித்தருளியிருக்கையாலே ஆச்சான்பிள்ளையைக் காட்டிலும் பெரியவாச்சான்பிள்ளை வேறுவ்யக்தியே.

3. தத்வத்ரயம் 9-ஆம் சூர்ணையின் வியாக்கியானத்தில் – விவரணத்திலாச்சான்பிள்ளை யருளிச்செய்ததொரு ஸ்ரீஸூக்தியை யெடுத்துக் காட்டுகையில், பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தியென்று திண்ணமாக எண்ணத்தக்க மூலவாக்ய மொன்றை யெடுத்துக்காட்டி அதற்கு விவரணமாக ஆச்சான்பிள்ளை யருளிச்செய்ததையும் காட்டியிருக்கையாலே இருவரும் வெவ்வேறு வ்யக்திகளே.

4. மாமுனிகள் ஸம்வாத ப்ரமாணங்கள் காட்டியருளும்போது முற்பட்ட ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளை முன்னேயெடுப்பது, பிற்பட்ட ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளைப் பின்னேயெடுப்பது என்கிற நியமம் வழுவாதபடி அடைவே யெடுத்துக் காட்டுபவராகி, நடுவில்திருவீதிப்பிள்ளைக்குப் பிறகும் பிள்ளைலோகாசார்யர்க்குப் பிறகுமே ஆச்சான்பிள்ளையை நான்கிடங்களில் நிர்தேசித்திருக்கையாலே இவர் பெரியவாச்சான் பிள்ளையல்லர்.

5. ஸம்ப்ரதாயத்தில் பெரிய என்கிற விசேஷணம் திருவடி, திருமலைநம்பி முதலானார்க்குமுள்ளது. அவர்களை ஸ்வக்ரந்தங்களில் நிர்தேசித்தருளுகிற மாமுனிகள் ஓரிடத்திலும் பெரியவென்கிற விசேஷணத்தை விட்டு நிர்தேசித்தது கிடையாது. பெரியவாச்சான்பிள்ளையைக்காட்டிலும் வேறுபட்டவரென்று யாவருமிசைந்த வொரு வ்யக்தியை மாமுனிகள் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானத்தில் (3—9—4-ல்) ஆச்சான்பிள்ளை யென்று குறிப்பிட்டுள்ளார். அவ்விதமாகப் பெரியவாச்சான்பிள்ளையை ஒருகாலும் மாமுனிகள் குறிக்கமாட்டாரென்பது அவருடைய ஸ்ரீஸூக்தி ஸந்நிவேச ஸித்தம்.

6. பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த திவ்யப்ரபந்த வியாக்கியானங்களிலிருந்து மேற்கோளாகச் சில ஸ்ரீஸூக்திகளை மாமுனிகள் தம்முடைய பெரியாழ்வார் திருமொழி (4—1—8), வியாக்கியானத்திலும் ரஹஸ்ய வியாக்கியானங்களிலும் அடிக்கடி யெடுத்துக்காட்டுகிறார். அங்கெல்லாம் நியமேந பூர்வர்கள் என்றே மிகச் சிறந்த சொல்லால் பெரியவாச்சான்பிள்ளையை நிர்தேசித்தருளுகிறார். அப்படிப்பட்டவர் அந்த மஹாசார்யரையே ஆச்சான்பிள்ளை யென்று ஸாமான்யமாக இருபது இடங்களில் எழுதினாரென்றால் இது பாமரர்களுங்கூட இசையத்தக்கதன்று.

7. முன்னும் பின்னும் சில ஆசார்யர்களைப் பெயரிட்டுக் குறிக்கும்போது அந்த ப்ரகரணத்தில் பெரியவாச்சான் பிள்ளையையும் குறிக்கவேண்டிவந்தால் அங்கு பூர்வர்கள் என்று எழுதுவது க்ரந்திகஸரணி யல்லாமையால் ப்ரஸித்தமான பெயரையிட்டே நிர்தேசிக்க வேண்டியிருப்பதனாலே உபதேச ரத்தினமாலையிலும் தத்வத்ரயஸ்தலவிசேஷத்திலும் பெரியவாச்சான்பிள்ளையென்று நிர்தேசிக்கை ஆவச்யகமாயிற்று. ஆச்சான்பிள்ளை யென்று குறிப்பிட்ட விடங்களிலெல்லாம் மாமுனிகளுக்குப் பெரியவாச்சான்பிள்ளையே விவக்ஷிதராயிருப்பாராகில் அவரை முதல் தடவையாகக் குறிக்கும்போது பெரியவாச்சான் பிள்ளையென்று குறிப்பிட்டும், அவரருளிய க்ரந்தத்தின் பெயரையும் அங்கேயே காட்டிவிட்டும் அடுத்த பர்யாயங்களில் பெரிய என்பதை விட்டு ஆச்சான்பிள்ளையென்றே அருளிச்செய்தும் போருவது யுக்தமான நடை. இந்த நடைக்கு மாறுபாடாக இருப்பதோடு இடையிலோரிடத்தில் பெரியவாச்சான்பிள்ளையென்று இருப்பதும் முன்னும் பின்னும் இருபதிடங்களில் ஆச்சான்பிள்ளையென்றிருப்பதும் ஏகவ்யக்தி விஷயந்தானென்று சொல்லுவது ப்ராமாணிக ப்ராஜ்ஞகோஷ்டியில் பரிசு பெறாது.

8. பரந்தரஹஸ்யம் முதலிய ரஹஸ்யக்ரந்தங்களையும் பெரியவாச்சான்பிள்ளையே விரிவாக அருளிச்செய்திருந்தால் உபதேசரத்தினமாலையில் திவ்யப்ரபந்த வியாக்கியான விஷயத்தில் பெரியவாச்சான்பிள்ளைக்கு மஹத்தான கௌரவத்தைக் காட்டிவிட்டு ரஹஸ்யார்த்தவிஷயத்தில் பிள்ளைலோகாசார்யர்க்கு மஹத்தான பெருமையை விளக்கியிருப்பது விரஸமாகும். ரஹஸ்யார்த்தங்களையும் பெரியவாச்சான்பிள்ளையே ப்ரபஞ்சனஞ் செய்தருளினாரென்று ஒரு பாசுரமாவது அவச்யம் அருளிச் செய்திருக்கவேண்டும். மாமுனிகள் இதை உபேக்ஷிக்கப்ரஸக்தியே கிடையாது. ரஹஸ்யார்த்தத்திற்காகப் பெரியவாச்சான் பிள்ளையைப்பற்றி ஒரு பாசுரங்கூட அருளாமையாலும் அதுபற்றிப் பிள்ளைலோகாசார்யர்க்கே ஏழு பாசுரங்கள் அருளிச் செய்திருக்கையாலும் அவ்வுலகாசிரியர்க்குப் பிற்பட்டவரே பரந்தரஹஸ்யாதிகர்த்தா வென்பது அசைக்கமுடியாதபடி தேறுவதாம்.

9. நம்பிள்ளை திருவடிகளில் நேராகக் கேட்டவரும் பலவிதங்களிற் பெருமை பெற்றவருமான பெரியவாச்சான்பிள்ளையே பரந்தரஹஸ்யாதிகளை யருளிச் செய்திருந்தால் அவருடைய க்ரந்தங்களைவிட்டுப் பிள்ளைலோகாசார்யருடைய முமுக்ஷுப்படி முதலான க்ரந்தங்களையே எங்கும் யாவரும் காலக்ஷேபக்ரந்தமாகக்கொள்ள ப்ரஸக்தியே யிராது. ஆச்சான்பிள்ளை ஸந்ததியாரென்று சொல்லிக் கொள்பவர்களுங்கூட இற்றைக்கும் நாளைக்கும் பரந்தரஹஸ்யாதிகளின் பெயரையுங் கேட்டறியாதவர்களாகவன்றோ உண்மையுள்ளது. ப்ரக்ருத விஷயத்தில் ப்ரபலமான சான்று இஃதொன்று போதுமே.

10. பரந்தரஹஸ்யத்தில் வேதாந்ததேசிகருடைய சில வாதங்களுக்கு பதில் தெரிவிக்கப்பட்டுமிருக்கிறது. பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளை மேற்கோள்காட்டும் வேதாந்த தேசிகர் பெரியவாச்சான்பிள்ளைக்குப் பிற்பட்டவரென்பது நிர்விவாதம். அவருடைய உக்திகளுக்கு பதில்சொல்லுகிற பரந்தரஹஸ்யகாரர் பெரியவாச்சான்பிள்ளையாவரோ?

---

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஐதிஹ்ய நிர்வாஹ ரத்நமாலா.

(ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் தொகுத்தது.)

நாலாயிர திவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் பலபல ஐதிஹ்யங்களும் நிர்வாஹங்களும் பெரியவாச்சான்பிள்ளை வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலான பூருவாசாரியர்களால் அருளிச் செய்யப்பட்டிருக்கின்றன. அவை விசேஷித்து அநுஸந்திக்கத் தக்கவையாய் அடிக்கடி மனனம் பண்ணத்தக்கவையா யிருப்பதால் அவை யெல்லாம் திரட்டி ஒருங்கே சேர்க்கப்படுகின்றன. திருப்பல்லாண்டு முதற்கொண்டு வியாக்கியானங்களிலுள்ள ஐதிஹ்யங்களும் நிர்வாஹங்களும் விசேஷித்த ஆசார்ய ஸ்ரீஸூக்தி மேற்கோள்களும் வரிசையாக எடுத்துக் கோக்கப்படுகின்றனவிதில். கதையோடு கூடிய அர்த்த விசேஷங்களை ஐதிஹ்யமென்றும், "இதற்கு ஆளவந்தாரருளிச் செய்யும்படி; இங்கு எம்பெருமானாரருளிச் செய்யும்படி; என்று பட்டரருளிச் செய்தார்" என்று காட்டும் அர்த்த விசேஷங்களை நிர்வாஹமென்றும் பெரியார் வழங்குவர். இவை யிரண்டும் இதிலேயடங்கும். விவரிக்க வேண்டிய அவச்யமுள்ள விடங்களில் விவரணம் செய்யப்படும். .... ... *

### திருப்பல்லாண்டு 4 ஏடு நிலத்தில்.

(ஏடுநிலத்தில்.) ஏடு என்பது பொல்லாங்கு. 'உங்களைப் பொல்லாநிலத்திலே யிடுவதற்கு முன்னம்' என்று பிள்ளையமுதனார்.

### திருப்பல்லாண்டு 10 எந்நாளெம்பெருமான்.

(ஐந்தலையபைந்நாகத்தலைப்பாய்ந்தவனே!.) க்ருஷ்ணாவதாரமென்றால் ஆழ்வார்களெல்லாருமாகப் பரிவராயிருப்பர்கள்; இதுக்கடியென்? என்று ஜீயர் பட்டரைக் கேட்க; ராமாவதாரத்தில் பிள்ளைகள் தாங்கள் மிடுக்கராய் குணாதிகருமாய், பிதா சம்பராந்தகனுமாய், மந்த்ரிகள் வஸிஷ்டாதிகளுமாய், ஊர் அயோத்யையுமாய், காலம் நல்லடிக்காலமுமாயிருக்கையாலே அங்குத்தைக்கு ஒரு பயமில்லை; இங்கு, வந்துபிறந்தவிடம் சத்ருக்ருஹமாய், கம்ஸன் இடம்பார்த்து நலியும் துஷ்ப்ரக்ருதிகளை வரக்காட்டும் க்ரூரனுமாய், தமப்பன் இடையனுமாய், ஊர் இடைச்சேரியுமாய், பிள்ளைகள்தாங்கள் தீம்பருமாய், காலம் கலிகாலத்தோடு

தோள்தீண்டியாயிருக்கையாலே என் வருகிறதோவென்று பரிகைக்கு ஆழ்வார்களல்ல தில்லைகாணும் என்றருளிச்செய்தார். ... .... ...

[குறிப்பு:—திருப்பாவை. 16. நாயகனாய்நின்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் (மூவாயிரப்படியிலும் ஆறாயிரப்படியிலும் இவ்விஷயம் ஐதிஹ்யமாகவல்லாமல் ஸ்வவாக்ய ரீதியில் அருளிச்செய்யப்பட்டுள்ளது;

"த்ரேதாயுகமாகையாலே காலமும் நல்லடிக்காலமாய் தமப்பனார் சம்பராந்தகனுமாய் பிள்ளைகள் தாங்களும் ஆண்புலிகளாய், அவர்கள் தாம் வழியேபோய் வழியே வருமவர்களுமாய் மந்த்ரிகள் வஸிஷ்டாதிகளாய், ஊரும் திருவயோத்யையாய்.................. காலம் கலிக்குத்தோள்தீண்டியான த்வாபராந்தமாய், தகப்பனார் ஸாது ஸ்ரீநந்தகோபராவது, இவர்கள் சிறுப்பிள்ளைகளாவது, அதிலே தீம்பராவது, ஊர் இடைச்சேரியாவது, அதுதான் கம்ஸன்படைவீட்டுக்கு அடுத்தணித்தாய் அவனுக்கு இறையிறுக்குமூராவது, கம்ஸன்தான் சத்ருவாவது, எழும்பூண்டெல்லாம் அஸுரமயமாவது: ஆனபின்பு பயம் கெட்டோ இருக்கிறது?" என்று.

## பெரியாழ்வார் திருமொழி 2—1. 1. மெச்சூது சங்கம்.

(மணவாள மாமுனிகளின் வியாக்கியானம்.)

(அத்தூதனப்பூச்சி காட்டுகின்றான்.) இவ்விடத்தை உய்ந்தபிள்ளை (ஆ)பாடா நிற்க, திருவோலக்கத்திலே 'அத்தூதனென்று பெருமாளைக் காட்டுவது, அப்பூச்சி யென்று கண்ணை யிறுத்துக்கொண்டு வருவதாய் அபிநயிக்க, உடையவர்பின்னே ஸேவித்தெழுந்தருளியிருந்த எம்பார் திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக்காட்ட, அவரும் அப்படியே அபிநயித்துக் கொண்டுவர, 'இதுக்கடியென்?' என்று விசாரித்துப் புரிந்து பார்த்தருளி 'ஸ்ரீ கோவிந்தப் பெருமாள்! இருந்தீரோ?' என்றருளிச் செய்தாரென்று ப்ரஸித்தமிறே.

[விவரணம்;—இக்காலத்திலும் பாலலீலைகளில் (அப்) பூச்சி காட்டுகையென்று ஒன்றுண்டு. அதாவது, கண்ணையிறுத்துவது, மயிரால் முகத்தை மறைத்துக் காட்டுவது முதலாகச் செய்யும் பயங்கரமான சேஷ்டைகள். இப்பாசுரம் நம்பெருமாள் ஸன்னிதியில் சிறிய திருவத்யயநோத்ஸவத்தில் அரையர்ஸேவையில் வந்தபோது, உய்ந்தபிள்ளை என்னுமரையர் 'அத்தூதனப் பூச்சி காட்டுகின்றான்' என்னுமிடத்தை அபிநயித்துக் காட்டுகையில், அத்தூதன் என்பதற்கு இலக்காக எதிரே யெழுந்தருளியிருக்கிற நம்பெருமாளைச் சுட்டிக் காட்டிவிட்டு அப்பூச்சிகாட்டுகின்றானென்பதற்கு கண்ணிமையை மடக்கி இக்காலத்துச் சிறுவர்கள் பூச்சி காட்டுகிறவிதமாகவே அபிநயித்துக் காட்டினார். அந்த கோஷ்டியில் உடையவரும் அவர் பின்னே எம்பாரும் எழுந்தருளியிருந்தார்கள். அரையர் இப்படி அபிநயம் செய்வதைக் கண்ட எம்பார் கண்ணபிரான் அப்பூச்சி காட்டினவிதம் இதுவல்லவென்று, தாம் கொண்டதை அரையர்க்குத் தெரிவிப்பதற்காகத் தம்முடைய திருக்கைகளைத் தம் திருத்தோள்மேல் வைத்து ஸூசனையாகக் காட்டினார். சங்கு சக்கரங்களுடனே அவதரித்த கண்ணபிரான் *உபஸம்ஹர விச்வாத்மந் ரூபமேதச் சதுர்ப்புஜம்* என்ற கோரிக்கையின்படி அப்போது மறைத்துக் கொண்ட சங்கு சக்கரங்களை ஆயர்சிறுமியர்க்கு அடிக்கடி காட்டி அச்சத்தை விளைவித்தானென்பதே அப்பூச்சிகாட்டுகின்றானென்பதற்குக் கருத்து என்பதை எம்பார் ஸூசனையாகத் தெரிவித்தபடி. இக்குறிப்பைத் தெரிந்து

கொண்ட அரையர் தாம் முன்பு அபிநயித்தரீதியை விட்டு எம்பார் காட்டியது போலவே அபிநயிக்க, உடையவர் மிகவுகந்து, முதலில் வேறுவிதமாக அபிநயித்த அரையர் இப்போது இவ்விதமாய் அபிநயித்ததற்குக் காரணம் எம்பாருடைய ஸூசனையாகவே யிருக்கவேணு மென்று கருதி, திரும்பிப் பார்த்து எம்பாரே! இருக்கிறீரோ? என்றாராம். தூதனுய்த் தன் ஸௌலப்யத்தை வெளியிட்டதுபோல் மற்றும் பல பல ப்ரகாரங்களினால் தன் எளிமையை வெளியிட்டு இவன் நம்மிலே ஒருவன் என்று இவ்வுலகத்தவர் கொள்ளும்படி யிருப்பவனான கண்ணபிரான் சில ஸமயங்களில் அவர்கள் அஞ்சும்படி ஈச்வரத்வ சின்னங்களைக் காட்டுகிறு னென்பதே "அத்தூதனைப் பூச்சிகாட்டுகின்றான்" என்கிறவிடத்திற்கு விவக்ஷிதம்—என்று விளக்கப் பட்டதாயிற்று.]

## பெரியாழ்வார் திருமொழி 3–6–3. வானிளவரசு.

(வானிளவரசு.) திருவனந்தாழ்வான் மடியிலும் ஸ்ரீ ஸேனைபதியாழ்வான் பிரம்பின் கீழிலும் பெரிய திருவடி சிறகின்கீழிலுமாய்த்து இத்தத்வம் வளருவது—என்றிறே பட்டர் அருளிச் செய்வது.

## பெரியாழ்வார் திருமொழி 3–8–4. ஒருமகள் தன்னையுடையேன்.

ஆழ்வான் திருநாட்டுக் கெழுந்தருளினபோது உடையவர், விச்லேஷம் பொறுக்க மாட்டாமல் "ஒருமகள் தன்னையுடையேன்" என்றும் "உலகம் நிறைந்த புகழால் திருமகள்போல வளர்த்தேன்" என்றும் "செங்கண்மால்தான் கொண்டு போனான்" என்றும் அருளிச் செய்தா ரென்று ப்ரஸித்தமிறே. * உபமாநமசேஷாணாம் ஸாதூநாம் யஸ் ஸதாபவத் * என்கிறபடியே ஸாதுக்களுக்கெல்லாம் உபமான பூமியாகச் சொல்லலாம்படி யிருக்கையாலே உலகம் நிறைந்த புகழுள்ளது ஆழ்வானுக்கேயிறே.

## பெரியாழ்வார் திருமொழி 3–9. என்னாதன் - ப்ரவேசம்.

* மானமரு மென்னோக்கி யென்கிற (பெரிய திருமொழி 11–5.) திருமொழியிலே இரண்டு பிராட்டிமார்தசை ஏககாலத்திலே கூடும்படி என்? என்று ஜீயர் பட்டரைக் கேட்க, தேசவிசேஷத்தில் அநேக சரீர பரிக்ரஹம் ஏககாலத்தில் கூடுகிறபடி யெங்ஙனே? அப்படியே இவரையும் பார்த்து அருளினால் கூடும் என்றருளிச் செய்தாரென்று ப்ரஸித்தமிறே.

## பெரியாழ்வார் திருமொழி 3-9-4 மாற்றுத்தாய் சென்று.

(கூற்றுத்தாய் சொல்ல.)..................முற்பட்டயோஜனை நாலூர்பிள்ளையிட்டருளின வ்யாக்யான ப்ரக்ரியை. பிற்பட்டயோஜனை பிள்ளையிட்டருளின வ்யாக்யான ப்ரக்ரியை. முற்பட்ட யோஜனையில் * சென்று வனம்போகே * என்கிறவிதுக்கு ஸ்வரஸார்த்தம் ஸித்திக்கையும், * கூற்றுத்தாய் சொல்லக் கொடியவனம்போனவிது "தண்டகம் நூற்றவள் சொற்கொண்டுபோகி" என்றும் "குலக்குமரா காடுறையப்போவென்று விடைகொடுப்ப இலக்குமணன் தன்னொடுமங்கேகியது" என்றும் "கொடியவள்வாய்க் கடிய சொற்கேட்டு—கான்தொடுத்த நெறிபோகி" என்றும் கீழ்மேல் அருளிச்செய்தவற்றுக்குச் சேர்ந்திருக்கையுமுண்டு. ஸம்ப்ரதாயத்திலும் வந்தால், நம்பிள்ளை ஸ்ரீபாதத்திலே கேட்ட நாலூர்பிள்ளை யருளிச்செய்ததாகையாலே வந்த ப்ராபல்யமுண்டு. அவர்தாம் ஆச்சான்பிள்ளை திருத்தமப்

பனுராகையாலே பிள்ளைக்குப் பரமாசார்யருமிறே. ஆகையாலே அந்த யோஜனை முற்பட வெழுதி பிள்ளையருளிச் செய்த யோஜனை பிற்பட எழுதப்பட்டது.

## பெரியாழ்வார் திருமொழி 4–1–4. தோயம்பரந்த.

(மாயக்குழவியதனை.) சிறுவடிவைக் கொண்டு பெரியலோகங்களை வயிற்றிலே வைத்து ஒருபவனுன ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின அகடிதகடநா ஸாமர்த்யத்தால் வந்த ஆச்சர்யத்தையுடைய அந்தக் குழவியை. * ஜுஷ்ஸிஶு-வடிநெ ஶயிதொ கிதநூ தநூ ஜகஷி பிஷ்ரூஷெ ஸவிகாஸமெவ । ஸௌஶீமிமாம்தெ தவஶக்தி தகி-ந்தவ்யாஶவ்யாஜதஃ வ்யயஸெ கிமிஹாவதீர்ணஃ—முக்தச் சிசுர் வடதளே சயிதோகிதந்வா தந்வா ஜகந்தி பிப்ருஷே ஸவிகாஸமேவ, ஜசீமிமாந்து தவ சக்திமதர்க்கிதவ்யாம் அவ்யாஜத: ப்ரதயஸே கிமிஹாவ தீர்ண :.* என்றுரிறே ஆழ்வான்.

## பெரியாழ்வார் திருமொழி 4–1–9. நாழிகை கூறிட்டு.

(ஆழிகொண்டன்றிரவி மறைப்ப.) நிரவதிக தேஜோரூபமான திருவாழியாலே ஆதித்யனை மறைத்தால் லோகத்துக்கு மிகவும் வெளிச் செறிப்புண்டாமத்தனையன்றே ? ஆதித்யன் அஸ்தமித்தானென்னும்படி கண்களுக்கு இருண்டு தோற்றுவானென்னென்னில்; இந்த ஆதித்யனுடைய தேஜஸ்ஸு கண்ணாலே முகக்கலாம்படி அளவுபட்டிருக்கையாலே தமஸ்ஸு போம்படியாயிருக்கும்; அங்ஙனன்றிக்கே திருவாழியாழ்வானுடைய தேஜஸ்ஸு நேர்கொடுநேர் கண்கொண்டு பார்க்க வொண்ணுதபடி மிக்கிருக்கையாலே பளபளத்துக் கண்ணையிருளப் பண்ணிற்று; இதுதான் "ஆழியாலன்றங்காழியை மறைத்தான்" (பெரிய திருமொழி 5—7—8) என்கிறவிடத்திலே பூர்வர்கள் அருளிச் செய்தார்களிறே.

[குறிப்பு; இங்கே பூர்வர்கள் என்றது பெரிய வாச்சான்பிள்ளையை. அவருடைய திவ்யப்ரபந்த வியாக்கியானங்களிலிருந்து எடுத்துக் காட்டுமிடங்களிலெங்கும் மணவாள மாமுனிகள் பூர்வர்கள் என்றே நிர்தேசித்தருள்வது ரஹஸ்யவியாக்கியானங்களிலும் பலவிடங்களிற் காணத்தக்கது. மிகவும் அவசியமாகத் திருநாமத்தைக் குறிப்பிட்டேயாக வேண்டிய நிர்ப்பந்தமுள்ள விடங்களில் மாத்திரமே பெரியவாச்சான்பிள்ளை யென்று நாம நிர்தேசம் செய் தருள்வது ; உபதேச ரத்தினமாலையில் மூன்று பாசுரங்களிலும் தத்வத்ரய வியாக்கியானத்தில் ஒரிடத்திலும் அது காண்க.]

## பெரியாழ்வார்திருமொழி 4—2—5. ஒருவாரணம்.

(கருவாரணம்........திரியும்) அழகர்திவ்யாஜ்ஞைக்கு இளைத்து போகமாட்டாமல் மீளும். * ஸுஜநதொதி-ந்வ்யாஜ்ஞாமும்(ஸ)ஹ நகாதரவஶாநுயாயிநி கரிணி । ப்ரணயஜகலஹஸமாதிர் யத்ர வநாத்ரிஸ் ஸஷ ஸுஜநதொஷ்ணஃ—ஸுந்தரதோர்திவ்யாஜ்ஞாலம்பந (லங்கந) காதரவசாநுயாயிநி கரிணி, ப்ரணயஜகலஹஸமாதிர் யத்ர வநாத்ரிஸ் ஸஷ ஸுந்தரதோஷ்ண: * என்று இந்த வ்ருத்தாந்தத்தையருளிச் செய்தாரிறே ஆழ்வான்.

## பெரியாழ்வார் திருமொழி 4—2—7. மன்னர் மறுக.

(கொன்னவில் கூர்வேல் கோனித்யாதி.) மலயத்வஜ சக்ரவர்த்தி திருமாலிருஞ் சோலைச் சிலம்பாற்றிலே நீராடி ப்ரவணனுயிருந்த புராணவரலாறு இங்கு விரிவாக அருளிச் செய்யப்பட்டிருப்பது காண்க.

# சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் இரண்டாவது வருஷத்து ரிபோர்ட்டு.

ஷை ஸபையின் மூலமாக இரண்டாவது வருஷத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்ட
தமிழ் விபாகத்தைச் சேர்ந்த வெளியீடுகளின் விவரம் :—

| | | பக்கம். | விலை. |
|---|---|---|---|
| 1. | கத்யத்ரயவுரை சிறிய ஸைஜ் பக்கம் 126-க்கு .... | 63 | 1—2—0 |
| 2. | திருப்பாவையுரை .... .... | 84 | 1—4—0 |
| 3. | பகவத் விஷயம் முதற்பத்து .... .... | 112 | 1-12—0 |
| 4. | ஷை ஆறும்பத்து .... .... | 146 | 2—3—0 |
| 5. | திவ்யப்பிரபந்தத் திருநாமமாலை .... .... | 80 | 1—4—0 |
| 6. | திவ்யப்பிரபந்தக் கண்ணாடி .... .... | 30 | 0-12—0 |
| 7. | விஷ்ணு ஸஹஸ்ரநாமவுரை சிறிய ஸைஜ்பக்கம் 126-க்கு | 63 | 1—0—0 |
| 8. | ஸ்ரீராமாநுஜ பத்திரிகை 12 ஸஞ்சிகைகள் .... | 522 | 4—0—0 |

ஆகமொத்தம் ஆயிரத்து நூறு பக்கங்கள் இரண்டாவது வருஷத்தில் வெளியிடப் பட்டன.

வருஷம் 1-க்கு 600 பக்கங்களுக்குக் குறையாமல் அச்சிட்டு வெளியிடப்படு மென்று முதலில் வெளியிட்ட நிபந்தனையில் பிரசுரம் செய்திருந்தோம். பிறகு 10—11—48 தேதி வெளிவந்த பத்திரிகையில் இனி 800 பக்கங்களுக்குக் குறையாமல் வெளியிடுவோ மென்று தெரிவித்திருந்தோம். நம்மையுமறியாமல் எம்பெருமானுடைய திருவுள்ளத்தினால் அதற்கு மேலும் அதிகமாக 300 பக்கங்கள் பிரசுரமாகி யிருக்கின்றன இவ்வருஷத்தில்.

இனி மூன்றாவது வருஷத்தில் [அதாவது நாளது மாதம் முதலாக] வெளி வரப் போகிற க்ரந்தங்களைப் பற்றி உத்தேசமாகத் தெரிவிக்கிறோம். (1) பகவத்விஷயம் ஈடு—மற்ற பத்துக்கள்—அநுபந்தத்துடன். (2) ஆசார்யஹ்ருதயத்திற்கு மணவாள மாமுனிகள் அருளிச் செய்த வியாக்யானம்—பதவுரையுடன். (3) ஸ்ரீமத் வேதாந்த தேசிக ரஹஸ்யங்கள்.

மற்றும் ஸமயோசிதமாய் அவசியமான க்ரந்தங்களும் வெளியிடப்படும்.

முதல் வருஷத்து வெளியீடுகளின் விவரம்:—

| | | |
|---|---|---|
| 1. | பூர்வாசார்ய வைபவம் ... .... ... | 1—4—0 |
| 2. | ஆசார்ய ஹ்ருதய ஸாரம் .... ... .... | 4—0—0 |
| 3. | திவ்யப்ரபந்த ஸாரத்திரட்டு ... .... .... | 1—0—0 |
| 4. | பன்னிருதிங்களனுபவம் .... .... .... | 2—0—0 |
| 5. | நித்யாநுஸந்தானம் மூலம் .... .... ... | 1—0—0 |
| 6. | நித்யாநு ஸந்தானம் உரை ... .... ... | 2—8—0 |
| 7. | பரந்தரஹஸ்யம் மாணிக்கமாலை ... ... .... | 1—0—0 |

முக்கியமான கோரிக்கை ;— ஆஸ்திகர்கள் அனைவரும் இந்த ஸபையில் மெம்பர்களாகச் சேர்ந்து ஸபையை அபிவிருத்திக்குக் கொண்டுவர வேண்டுகிறோம்.

இப்படிக்கு,

G. முஸலப்ப ரெட்டியார் B.A.,B.L. C. ராமாநுஜய்ய செட்டி,
(ஸபையின் ஸெக்ரிடெரிகள்.)

லெட்டர் கரெஸ்பாண்டென்ஸ்—*To*: P. B. அண்ணங்கராசாரியார், காஞ்சீபுரம்.

# ப்ராமாணிகர்களுக்குப் பரமரஹஸ்யமொன்று வெளியிடப்படுகிறது.

சதுச்ச்லோகீ வியாக்கியானம் பெரியவாச்சான்பிள்ளை பணித்ததாகவும் அதை அச்சிடுவதாகவும் முன்னம் வெளியிட்டிருந்தவர்கள் பிறகு அது பிசகென்று திருத்தம் வெளியிட்டிருந்தார்களே, இதன் மருமத்தையுணர்த்துகின்றோம் கேண்மின். ஆச்சான்பிள்ளை ஸாதித்த ஸகல க்ரந்தங்களையும் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததாகவே அவர்கள் ப்ரமித்திருந்து சதுச்ச்லோகீ வியாக்கியானத்தையும் பெரியவாச்சான் பிள்ளையதாகவே எண்ணிக் கொண்டு அப்படியே அச்சிட்டுக் கொண்டுபோகையில், அதில் இரண்டாவது ச்லோகத்தில் லோகநாததயிதே! என்றவிடத்து வியாக்யானத்தில் "இவள் தாயாய் என்று தொடங்கி அவனுக்குப் பத்நியாய் என்று ஸம்பந்தத்வயத்தையும் அருளிச் செய்தாரிறே அபியுக்தாக்ரேஸரரான பிள்ளைலோகாசார்யரும்" என்கிற வாக்கியமிருப்பதைக் கண்டார்கள். இதனால் இது பிள்ளைலோகாசார்யருடைய க்ரந்தங்களுக்குப் பிற்பட்டதென்று தலைவிதியாய் இசைய நேர்ந்துவிட்டது. மேலே குறித்த வாக்யத்தை யெடுத்தெறிந்துவிட முடியாதபடி முன்னமே தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டுவிட்டது. கடைசியாக ஒன்றும் செய்ய முடியாமல் இதுபெரியவாச்சான்பிள்ளை பணித்ததன்று என்கிற பரமார்த்தத்தை வெளியிட்டே தீரவேண்டியதாயிற்று. பரந்தரஹஸ்யத்திற்கும் இதுவே கதிதான் என்பதை ப்ராமாணிகர்கள் நன்கறிவார்கள். எங்ஙனே யென்னில்; பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்தியை உதாஹரிக்கையாலே சதுச்ச்லோகீ வியாக்யானம் பெரியவாச்சான் பிள்ளையதன்று என்று இசைந்து தீரவேண்டினாப்போலே, பிள்ளை லோகாசார்யர்க்கும் பிற்பட்டவரான வேதாந்தாசார்ய ருடைய உக்திகளுக்கு மறுப்பு எழுதியிருக்கையாலே பரந்த ரஹஸ்யமும் பெரியவாச்சான் பிள்ளையதன்று என்று இசைந்துதீரவேண்டியது கடமையாகும்.

பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்த சதுச் ச்லோகீ வியாக்கியானமுமொன்று இருப்பதாகவும் அதுவும் அச்சிடப்படுகிறதாகவும் தெரிந்து பரமானந்த மடைகிறோம். . அது வெளிவந்துவிட்டால் அது கொண்டே பரந்தரஹஸ்யத்தினுண்மையையும் உள்ளபடி யுணரலாமென்பது பெரியார்களின் திருவுள்ளம். அதுவரையில் இந்த விவாதத்தை நிறுத்தி வைத்து அந்த க்ரந்தம் வெகு சீக்கிரமாக வெளிவரும் வழியைப் பார்ப்பதே ப்ராமாணிக க்ருத்யம்.

இப்படிக்கு,

வி. திருமலை ஐயங்கார்,

72, கீழச்சித்திரை வீதி, ஸ்ரீரங்கம்.